# எப்போதும் ஆனந்தம்

பூஜ்யஸ்ரீ ஸ்வாமி தயானந்த சரஸ்வதி



ஆர்ஷ வித்யா நிலையம், மலேசியா

10-1

# எப்போதும் ஆனந்தம்






பூஜ்யஸ்ரீ
ஸ்வாமி தயானந்த ஸரஸ்வதி





ஆர்ஷ வித்யா நிலையம்,
மலேசியா

வெளியீடு :
**ஆர்ஷ வித்யா நிலையம், மலேசியா**
என். 60 ஜாலான் சிலிபின், 30100 ஈப்போ,
பேராக் டாருல் ரிட்சுவான்.
தொலைபேசி என்: 05 - 2435404

முதற் பதிப்பு : 2000
1000 பிரதிகள்

அச்சமைப்பு :
**ஜெயஸ்ரீ வணிக நிறுவனம்,**
என். 375A, ஜாலான் சிலிபின், 30100 ஈப்போ,
பேராக் டாருல் ரிட்சுவான்.
தொலைபேசி என்: 05 - 5273473
நகல்வரி அஞ்சல் : 05 - 5286323

10 – 1

# முன்னுரை

ஞானக் கடலாகிய சற்குருநாதர் பூஜ்ய ஸ்ரீ தயானந்த சரஸ்வதி ஸ்வாமி அவர்கள் பல அரிய நூல்களை இயற்றியுள்ளார்கள். இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் அனேக சொற்பொழிவுகளை நிகழ்த்தியுள்ளர்கள். அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவுகளில் ஒன்றுதான் "எப்போதும் ஆனந்தம்" என்பதாகும்.

நாம் அனைவரும் எப்பொழுதும் விரும்பி நாடுவது ஆனந்தம். இந்த ஆனந்தத்தை நாம் பலவழிகளில் அடைய முயற்சிக்கிறோம். ஆனந்தம் இங்கேகிடைக்குமா? அங்கே இடைக்குமா? என்று தேடி அலைகிறோம், கிடைக்கிறதா?

ஆனந்தம் இரண்டு வகைப்படும். ஒன்று வரம்புக் குட்பட்ட ஆனந்தம் மற்றொன்று பரமானந்தம். தர்மா, அர்த்தா, காமா (அறம், பொருள், இன்பம்) என்னும் புருஷார்த்தங்களின் மூலமாக ஆனந்தத்தை அடைய முயற்சிக்கிறோம். இதில் எதை அடைந்தாலும் நம் அனுபவத்தினாலும் யுக்தியினாலும் விசாரனைச் செய்து பார்ப்போமானால் தர்மா, அர்த்தா, காமா மூலமாக அடைகின்ற ஆனந்தம்; இடம், நேரம், பொருளைச் சான்றுதான் இருக்கிறது. இது ஒரு வரம்புக்குட்பட்ட ஆனந்தமாகும்.

அப்படி என்றால் பரமானந்தம் என்பது என்ன? அதுதான் சாஸ்திரம் சொல்லுகின்ற வீடு அல்லது மோக்ஷ புருஷார்த்தம். இதன் மூலமாக அடைகின்ற நித்திய ஆனந்தம் - இடம், நேரம், பொருள்களுக்குள் அடங்காத பரமானந்தம்.

இந்தப் பரமானந்தத்தை அடைவதற்கு பூஜ்ய ஸ்ரீ தயானந்த சரஸ்வதி ஸ்வாமி அவர்கள் மிகவும் தெள்ளத் தெளிவாக இந்நூலில் விளக்கியுள்ளார்கள்.

ஸ்வாமிகளின் சொற்பொழிவினைத் தொகுத்து புத்தகமாக வழங்கியவர் ஹைராபாத்தைச் சேர்ந்த திருமதி மீரா சண்முகம் அவர்கள்.

மோக்ஷத்தை விரும்புகின்ற அனைவரும் இந்த அரிய நூலைப் படித்துப் பயன் பெறலாம்

**ஸ்ரீ ஸ்வாமி ஜிதாத்மானந்தா சரஸ்வதி**

\o - 1

# எப்போதும் ஆனந்தம்

பூஜ்யஸ்ரீ ஸ்வாமி தயானந்த சரஸ்வதி

### மனம் என்பது என்ன ?

மனம் என்று சொல்லுவதற்கு சமஸ்கிருதத்தில் அந்தக்கரணம் என்று பெயர். எதை நாம் பார்க்கிறோமோ, கேட்கிறோமோ, தொடுகிறோமோ, அது மனத்தில் பதிவாகிறது. உதாரணமாகக் குடத்தைப் பார்க்கும்போது குடம் என்ற வஸ்துவின் ஸ்தூல (வடிவம்) மனத்தில் எண்ண வடிவமாக ஆகும். இதே போல, வஸ்திரம் (துணி) மடம் முதலியவைகளும் அவைகளின் உருவங்களும் மனதில் பதிந்து பதிவு ஏற்படுகிறது.

இந்த விஷயங்கள் எப்போதும் மாறிக் கொண்டே இருப்பதால்எண்ணங்கள் மாறுகின்றன. இந்த எண்ணங்களின் மாறுதல்களுக்குப் பொதுவாக விருத்தி என்று பெயர்.

### மனத்தின் செயல்கள்

மனத்தினுடைய வெவ்வேறு செயல்களை வைத்து அதை மனம், புத்தி, சித்தம் என்று கூறுகிறோம். இவை ஒரே மனத்தின் பல்வேறு செயல்கள். சாதாரணமாக, எல்லாவிதமான எண்ணங்களுக்கும் மனம் என்ற வார்த்தையையே பயன்படுத்துகிறோம். ஆனால் இந்த ஒரே மனம் எவ்விதம் மூன்றுவிதமான கிரியைகளைச் செய்கின்றது ?

### மனம்

சங்கல்ப விகல்பங்களோடு கூடிய எண்ணங்களுக்கு மனம் என்று பெயர். சங்கல்பம் என்பது ஒன்றைப் பற்றி நினைப்பது. இதற்கு

மாறாக எண்ணுவதற்கு விகல்பம் என்று பெயர். உதாரணமாக, வெளியே போகும்போது கதவைப்பூட்டி விட்டுப் போவோம். கொஞ்ச தூரம் சென்றதும், கதவைப் பூட்டினேனா இல்லையா என்ற சந்தேகம் வரும். "கதவைப் பூட்டி விட்டேன்" என்று நினைப்பது சங்கல்பம். "கதவைப் பூட்டவில்லை" என்று நினைப்பது விகல்பம்.

இம்மாதிரி சங்கல்ப, விகல்பங்கள் மனதில் மாறி மாறி ஏற்பட்டுக் கொண்டேயிருக்கின்றன. இவ்விதம் சங்கல்பம், விகல்பம் இரண்டோடும் கூடி நிச்சய மற்ற, சந்தேகமான நிலையில் இருக்கும் எண்ணங்களுக்கு மனம் என்று பெயர். ஆசை, கோபம், பொறாமை, அசூயை, பாசம், கருணை இம்மாதிரியான எண்ணங்கள் எல்லாம் மனத்தின் கீழ் வரும்.

## புத்தி

இது குடம், இது படம் என்ற நிச்சயமான எண்ணம் இருக்கும்போது ஏற்படும் விருத்திக்கு புத்தி என்று பெயர். மேலே சொன்ன உதாரணத்தில், கதவைப் பூட்டினேனா, இல்லையா என்ற நிலையில் மனம் இருக்கும்போது, சிந்தனை செய்து, விகல்பமில்லாமல் "கதவைப் பூட்டி விட்டேன்" என்று நிச்சயம் செய்யும்போது புத்தி செயல்படுகிறது. ஒரு விஷயத்தைத் தெரிந்து கொள்வதற்காக ஆராய்ச்சி செய்யும்போது ஏற்படும் விருத்திகளுக்குக் கூட, புத்தி என்று கூறலாம்.

## சித்தம்

சித்தம் என்பது நாம் முன்பு அனுபவித்த எண்ணங்களின் நினைவுகளாகும். சித்தம் என்று சொல்வது நினைவு ரூபமாக இருக்கக்கூடிய விருத்திகள்.

மனம், புத்தி,சித்தம் என்ற மூன்றும் சேர்ந்தது அந்தக்கரணம்.

## மனம் ஒரு கருவியே!

எதை வைத்து நாம் ஒன்றை அடைகின்றோமோ அதைக் கரணம் என்கிறோம். நடந்து செல்வதற்குக் கால்கள் கரணங்களாக இருக்கின்றன. ஒரு வஸ்துவை எடுப்பதற்குக் கைகள்

கரணங்களாக இருக்கின்றன. வஸ்துவைப் பார்ப்பதற்கு கண்கள் கரணங்களாக இருக்கின்றன. கர்மாக்களைச் செய்ய உதவியாக இருக்கும் கை, கால் முதலிய கரணங்கள் கர்மேந்திரியங்கள். அதாவது, கர்மாக்களைச் செய்யக்கூடிய கரணங்கள். உலகத்தை அறிய உதவியாக இருக்கும் காரணங்களான ஐம்புலன்களை ஞானேந்திரியங்கள் என்று சொல்கிறோம். இவை யாவும் நம் ஸ்தூலதேகத்தில் இருப்பவை.

கரணங்களுக்கு உதவியாகச் செயல்படும் வெளிக்கருவிகளே உபகரணங்கள். தொலை தூரத்தில் உள்ள வஸ்துவைப் பார்க்கக் கண்ணுக்கு உதவியாக இருப்பது டெலஸ்கோப் என்னும் உபகரணம். இதேபோல் கண்ணுக்குக் கண்ணாடியானது உபநேத்ரம் என்ற உபகரணமாகும்.

மேற்கூறிய இந்திரியங்களுக்கு எல்லாம் தானாக வேலை செய்யும் சக்தி இல்லை. மனத்தோடு கூடி இருந்தால் தான் அவைகள் வேலை செய்யும். மனம் எங்கோ இருந்தால் கண் பார்க்காது, காது கேட்காது.



உதாரணமாக, ஒரு வகுப்பில் ஆசிரியர் கணக்குச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். பாடம் முடிந்ததும், ஒரு பையனைப் பார்த்து, "என்னப்பா, எல்லாம் நுழைந்ததா?" என்று கேட்டார். மேல் கூரையின் உள்ளே நுழைந்து கொண்டிருந்த எலியைப் பார்த்துக் கொண்டிருந்த அந்தப் பையன் உடனே,

"எல்லாம் நுழைந்தது. வால் மட்டும் பாக்கி உள்ளது"

என்று பதில் கூறினான். இதிலிருந்து என்ன தெரிகிறது? அவனுடையமனதானது மேலே இருந்ததினால் காது இங்கே இருந்தபோதிலும் காதிற்குக் கேட்கும் சக்தி இல்லாமல் போய்விட்டது.

மனம் "பார்" என்றால்தான் கண் பார்க்கின்றது. யாராவது பேசிக்கொண்டிருந்தால் காது அதை ஒட்டுக் கேட்கும். இவன் மனம் காதில் இருப்பதால் விஷயத்தைக் கேட்கிறான். மனதானது காதை உபயோகிப்பதால் மனம் கரணம் ஆகின்றது. இதிலிருந்து, வெளியில் இருக்கும் கை,கால்,கண்,காது முதலான வெளிக்கரணங்கள் உள்ளே இருக்கும் மனம் என்ற கரணத்தின் கையில்தான்இருக்கின்றன என்று தெரிகிறது.

மேற்கொண்டு, "இது பானை" "இது துணி" என்று தெரிந்து கொள்ளுவதற்கு, புத்தியானது ஒரு கரணமாக அமைந்திருக்கிறது. இதனால் புத்தியும் ஒரு கரணம் தான்.

"நீ என்ன சாப்பிட்டாய்" என்று கேட்கும்போது அங்கு மனம் சித்தமாக மாறுகிறது. முன்பு நாம் சாப்பிட்டதை நினைவுபடுத்திக் கூறுவதற்கு உரிய கரணமாக சித்தம் இங்கு உள்ளது.

ஆனால் இந்த அந்தக்கரணத்தை நாம் கருவியாகப் பார்ப்பதில்லை. அந்தக் கரணத்தையே "நாம்" என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். அப்படி இல்லை. இதுவும் நமக்குக் கரணம்தான். கரணத்திற்கு தானாக ஒரு காரியமும் செய்ய முடியாது.கரண்டிக்குத் தானாகப் பரிமாறும் சக்தி கிடையாது. கரண்டியை யாராவது கையில் எடுத்து உபயோகித்தால்தான் உதவும். உபயோகமாகும் இந்தக் கரண்டி, யார் கையில் உள்ளதோ அவன் கர்த்தா.

## காலா, கையா.... எது 'நான்' ?

இப்போது நீங்கள் எதைப் பார்க்கிறீர்களோ அது "கர்ம" எனப்படும். எதனால் பார்க்கிறீர்களோ அதற்குக் "கரணம்" என்று பெயர். யார் பார்க்கிறானோ அவனுக்குக் "கர்த்தா" என்று பெயர்.

உதாரணமாக, "நெருப்பினால் சமையல் செய்கிறான்" என்று கூறும்போது சமைப்பதற்கு நெருப்பு கரணமாகிறது. "காலினால் நடக்கிறான் என்று சொன்னால் கால் கரணமாக அமைகிறது.

யாருக்குக் கரணமாக இருக்கிறது? யார் நடக்கிறானோ அவனுக்குக் கரணமாக இருக்கிறது.

அவன் "நட" என்றால் கால்கள் நடக்கின்றன. அவன் "தூக்கு" என்றால் கைகள் தூக்குகின்றன. இவைகள் தானாக ஒன்றும் செய்வதில்லை. இவைகளை யாரோ ஒருவன் உள்ளிருந்து செய்ய வைக்கிறான். எவனுடைய கையில் இந்தக் கரணங்கள் இருக்கின்றனவோ அவன்தான் "கர்த்தா" எனப்படுகின்றான். அவனுக்குத்தான் "நான்" என்று பெயர்.

இந்த உபகரணங்களினாலும், கரணங்களினாலும் நாம் எதை அடைகின்றோமோ அதற்கு "கர்ம" என்று பெயர்."நான் (கால்களினால் நடந்து) கிராமத்திற்குச் சென்றேன்" என்று சொல்லும்போது, "சென்றேன்" என்று வினைச் சொல்லுக்குக் கர்மாவாக இருப்பது கிராமம். அதாவது "எங்கே சென்றாய்" என்ற கேள்விக்குப் பதிலாக வருவது "கர்ம". எவன் சென்றானோ அவன் கர்த்தா. இங்கு "நான்" என்பது கர்த்தா, எப்படி சென்றேன்? கால்களினால் நடந்து சென்றேன். இங்கு கால்கள் கரணம், "சைக்கிளினால் சென்றேன் என்றால் சைக்கிள் உபகரணமாகிறது. எனவே ஒரு கிரியையினால் எதை அடைகின்றோமோ அதற்குப் பெயர் "கர்ம". இதை ஆங்கிலத்தில் (Object) என்று கூறுவார்கள்.

இதில் "நான்" எனப்படுவது கர்த்தாவா, கர்மாவா, கரணமா என்று பார்க்க வேண்டும். முதலில் தேகத்தை எடுத்துக் கொள்வோம். நமக்கு இந்தத் தேகம் கர்த்தாவா? கரணமா? கர்மமா?

ஏனெனில் இந்தத் தேகம் "மெலிந்துவிட்டது","பருத்து விட்டது","வயதடைந்து விட்டது" என்றெல்லாம் கூறும்போது நான் தேகத்தைப் பார்த்துத்தானே கூறுகின்றேன். அதனால் தேகம் பார்க்கப்படும் வஸ்துவாக இருக்கிறது. தேகத்தைப் பார்ப்பதில் கண்ணும், மனமும் கரணங்களாக இருக்கின்றன. எனவே பார்க்கப்படும் தேகம் பார்க்கும் கர்த்தாவாக இருக்க முடியாது.

சில விஷயங்களை நாம் மனத்தினாலும் பார்ப்பதுண்டு. புகையைப் பார்த்து நெருப்பு இருப்பதாய்க் கூறுகிறோம். இங்கு புகைக்கு "லிங்கம்" என்று பெயர். எதை வைத்து நாம் இன்னொன்றைத் தெரிந்து கொள்கிறோமோ அதற்கு "லிங்கம்"

என்று பெயர். இங்கு கரணமாகிற கண்களினால் புகையை மட்டும் பார்த்துவிட்டு, அங்கு நெருப்பு இருப்பதாக அனுமானம் செய்கிறோம். இந்த நெருப்பு மனத்தினால் பார்க்கப்படுவதால் மனமும் கரணமாகிறது. எனவே அனுமானம் என்பதும் ஒரு கரணம்தான்.

நாம் லிங்கத்தை வைத்து பூஜை செய்வதும் இதே மாதிரிதான். ஆண்டவனுக்கு இது "லிங்கமாக இருக்கட்டும்" என்று லிங்க வடிவத்தைப் பூஜை செய்கிறோம். நாம் பூஜை செய்வது எல்லாமே லிங்கம்தான். படங்கள், பிரதிமைகள் இவை எல்லாமே லிங்கம்தான். ஏனென்றால் இவைகள் எல்லாவற்றின் மூலமாகவும் நாம் ஆண்டவனையே பூஜை செய்கிறோம்.

இதிலிருந்து என்ன தெரிகிறது என்றால் நாம் மனத்தினால் மட்டும். சில சமயங்களில் விஷயங்களைப் பார்ப்பதால் மனதும் ஒரு கரணமாக இருக்கிறது என்பதே. கரணமாக இருக்கும் மனது கர்த்தாவாக முடியாது. கர்த்தாதான் கரணமாக மனதை உபயோகப்படுத்த வேண்டும்.

இப்போது எப்படி இருக்கிறது என்றால் கர்த்தாவான இவன் கரணங்களை உபயோகப்படுத்துவதற்கு பதில் இவனைக் கரணங்கள் உபயோகப்படுத்துகின்றன. நாம் கரண்டியால் பரிமாறுகிறோம். கரண்டியே சாப்பிட ஆரம்பித்தால் அது எவ்விதம் கரணமாகும்? கரண்டி கர்த்தாவாக மாறிவிடும். அதன் விளைவுகள் விபரீதமாக இருக்கும். நாம் "கர்த்தா யார்" என்று தெரிந்து கொள்ளாமல் கரணமாகிற மனத்தையே "நாம்" என்று நினைத்துக் கொண்டுவிட்டதால் தான் மனத்தின் கையில் சிக்கித்தவிக்கிறோம்.

"என் மனம் துக்கப்படுகின்றது. நான் துக்கத்தில் இருக்கிறேன்" என்று பலர் கூறக் கேட்கலாம். இங்கு, துக்கப்படுகின்ற "மனதும்", "என் மனம் துக்கப்படுகின்றது. நான் துக்கத்திலிருக்கின்றேன்" என்று சொல்கிற கர்த்தாவான "நான்" என்பதும் ஒன்று சேர்ந்துவிடுகிறது.இதனால் தான் நான் "துக்கி (துக்கமுள்ளவன்) என்று சொல்கிறான். மனம் கஷ்டப்பட்டால் இவனுக்கு என்ன? அது கஷ்டப்படட்டுமே. ஆனால். "மனம் கஷ்டப்படுகிறது என்றால் நான் துக்கி தானே. நான் துக்கத்தை அடைகிறேனே" என்று முறையிடுவான்.

விவேகம் இல்லாததினால், கரணத்தைக் கர்த்தாவாக நினைக்கின்றான். இதனால் மனத்திற்கு வரும் கஷ்டங்கள் எல்லாம் இவனுக்கு வருவதாக நினைக்கிறான். தனக்கு துக்கம் ஏற்பட்டுள்ளது என்று நினைப்பதால், "நான் அசாந்தன் (சாந்தி அற்றவன்) என்று சாந்தியைத் தேடுகிறான். சாந்தியைத் தேடி, சினிமா, போதை தரும் வஸ்துக்கள், இவைகளை நாடிச் செல்வான். அங்கும் அவனுக்கு சாந்தி கிடைக்காது.

சொர்க்கத்திற்குப் போனாலும் அங்குள்ளவர்களுக்கும் துக்கம் உண்டு. அங்கு கர்ம தேவர்கள் என்று ஒரு வகைத் தேவர்கள் இருப்பார்கள். அவர்களின் சுகத்தைக் காட்டிலும் நூறு பங்கு சுகம் தேவர்களுக்கு உண்டு. தேவர்களைவிட 100 பங்கு சுகம் இந்திரனுக்கு உண்டு. இந்திரனைவிட தேவ குருவான பிருஹஸ்பதிக்கு 100 பங்கு அதிக சுகம் உண்டு. அவரைவிட பிரஜா பதிக்கு இன்னும் 100 பங்கு அதிக சுகம் உண்டு.

இதைப்போல, சுகத்தில் அங்கும் ஏற்றத்தாழ்வு உள்ளது. எங்குமே சுகம் இல்லை. எனவே யாகாதி கர்மாக்களைச் செய்து சொர்க்கத்திற்குப் போனாலும் நிரந்தர சுகம் கிடைக்கவே கிடைக்காது.

கடைசியில் சுகத்தைத்தேடி இவன் (சாமியாரிடம்) மஹான்களிடம் செல்வான். அவர் உண்மையை அறிந்த மஹா புருஷராக இருந்தால் "உன்னிடமே சாந்தியும்,சுகமும் உள்ளது. நீயே சாந்த ஸ்வரூபன், நீயே சுகஸ்வரூபன். இதை அறிந்து கொள்" என்று அவனைத் திருப்பி விடுவார்.

நாம் நிரந்தர சுகம் அடைய வேண்டுமானால் நம்மிடமே திரும்பி வரவேண்டும். நம்முடைய மனத்தைப் பற்றிய உண்மைகளைத் தெரிந்து கொள்ள வேண்டும். "மனதானது என்னுடைய கரணம். நான் அதன் கர்த்தா" என்று அறிந்து கொள்ள வேண்டும்.

இந்த மனத்திற்கு மூன்று விதமான காரியங்களைச் செய்யக்கூடிய சக்தி உள்ளது. ஞான சக்தி, இச்சா சக்தி, கிரியா சக்தி என்பவை அவை, ஒன்றைப் பற்றி அறிந்து கொள்ளக் கூடிய சக்திக்கு "ஞான சக்தி" என்று பெயர். இது ஞானத்தை அடைவதற்கான சக்தி. எல்லோருக்கும், இந்த ஞான சக்தி உண்டு.

உலக விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளும் போது, அவைகளை அடைய வேண்டுமென்றோ, அல்லது தவிர்க்க வேண்டுமென்றோ ஒரு இச்சை மனத்தில் ஏற்படுகிறது. "இது வேண்டும்" "இது வேண்டாம்" என்ற இந்த இச்சிக்கக் கூடிய சக்தியும் - இச்சா சக்தியும் எல்லோருக்கும் உண்டு. மேஜை ஜடமானதினால் அதற்கு இச்சா சக்தி இல்லை. ஆனால் மனத்திற்கு இச்சா சக்தியுள்ளது. அதைச் சக்தியாக நாம் உபயோகப்படுத்திக் கொள்கிறோம்.

இச்சிப்பதில் தவறு ஒன்றும் இல்லை. இச்சைகள் தர்ம அதர்மங்களுக்கு உட்பட்டு இருக்க வேண்டும். நம்முடைய இச்சைகளை நிறைவேற்றிக் கொள்ள கிரியா சக்தியும் நம்மிடம் உள்ளது. ஞான சக்தி, இச்சா சக்தி, கிரியா சக்திகளோடு கூடியது நான் என்ற ஆத்மா, இவைகளை நாம் உபயோகப்படுத்திக் கொள்ளத் தெரிந்து கொள்ள வேண்டும். இது தெரியாவிட்டால் தான் கஷ்டம் ஏற்படுகின்றது.

## "வால்" நாயை ஆட்டலாமா ?

**நா**ய் வாலை ஆட்டினால் நன்றாகத் தான் இருக்கும். ஆனால் வால் நாயை ஆட்டினால் எப்படி இருக்கும். குரங்காட்டி குரங்கினால் ஆட்டப்படலாமா? அது போல, இவன் "நான் கஷ்டப்படுகிறேன்" என்று சொன்னால் என்ன அர்த்தம்? இவன் தன் மனத்தை ஆட்டாமல், மனம் இவனை ஆட்டுகிறது என்றுதான் அர்த்தம்.

கை, கால்,கண்,காது முதலியவைகளை எப்படி நாம் அவைகள் கரணங்கள் என்று நன்கு தெரிந்து உபயோகப் படுத்துகிறோமோ அதே போல இந்த மனத்தையும் கரணமாகத் தெரிந்து நன்கு உபயோகப்படுத்தினால் நம்மை மனம் கஷ்டப்படுத்தாது. கர்த்தாவாகிய நம்முடைய கையில் மனம் கரணமாக இருக்குமே தவிர துக்கத்தைக் கொடுக்காது.

நான் என்ற பொருளுக்கு அர்த்தம் கர்த்தா. கர்த்தாவானவன் கரணமாக இருக்கும் மனத்தைத் தன் கையில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆனால் அவிவேகத்தால் கர்த்தாவிற்கும் கர்ம, கரணம் என்பதற்கும் குழப்பம் ஏற்படுகின்றது. கரணத்தைக் கர்த்தாவாக

நினைக்கிறான். நான் என்ற பொருளும், துக்கம் என்ற எண்ணமும் இரண்டும் ஒன்று சேர்ந்து, "நான் துக்கி (துக்கம் உடையவன்) என்று நினைக்கிறான். இதற்குக் காரணம் கர்த்தாவின் உண்மையான ஸ்வரூபம் தெரியாததுதான். இந்தப் பகுதியில் அதை கவனிப்போம்.

உலக விவகாரங்களில் நாம், கர்த்தாவை "நான்" என்று சொல்கிறோமே தவிர, உண்மையில் இந்தக் கர்த்தாகூட "நான்" அல்ல. அந்தக் கர்த்தாவுக்கும் அடிப்படையான உண்மை ஒன்று இருக்கிறது. அது தெரியாததினால் தான் "நான் கர்த்தா" என்று நினைக்கிறான். கர்த்தா என்ற வார்த்தைக்கு செயல் செய்பவன் என்று பொருள். "நான் கேட்கிறேன்" என்று சொல்லும்போது கேட்கிற காரியத்தை நான் செய்து கொண்டிருக்கிறேன் என்று அர்த்தம். இவ்விதம் "நான் நடக்கிறேன்", "நான் பேசுகிறேன்" என்றெல்லாம் சொல்லும்போது ஒரு குறிப்பிட்ட வேலையை நான் செய்து கொண்டு இருக்கிறேன் என்று தெரிகிறது.

அப்போது, இதில் எந்த வேலையை "நான் என்ற வஸ்துவின் ஸ்வரூபமாக அல்லது குணமாகக் கூறுவது? கர்த்தாவான "நான், என்ற வஸ்துவின் தர்மம் அல்லது குணம் எப்போதும் பார்ப்பது என்பதாக இருந்தால், பார்க்கும் செயல் என்பது அதன் இயற்கையானால் அது எப்போதும் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும். அதாவது எப்போதும் பார்க்கக்கூடிய காரியத்தைச் செய்பவனாக நான் இருக்க வேண்டும்.

இது எவ்வாறென்றால், நெருப்புக்குச் சூடு என்பது எப்படி அதனுடைய குணமோ! அவ்விதம் அதனால் எங்கெல்லாம் நெருப்பு இருக்கின்றதோ அங்கெல்லாம் சூடு இருக்கத்தான் இருக்கும்.

அம்மாதிரியே பனிக்கட்டி என்று சொன்னால் அது குளிர்ச்சியாகத்தான் இருக்கும். பனிக்கட்டிக்குக் குளிர்ச்சியும், நெருப்பிற்குச் சூடும் அவைகளுடைய குணங்கள். இம்மாதிரியே ஆத்மாவிற்குப் பார்ப்பது கேட்பது, பேசுவது, நுகர்வது முதலானவைகள் தர்மங்களாக இருந்தால் இதில் எதை நாம் உண்மையாக எடுத்துக் கொள்வது.

இந்தக் கிரியைகளில் ஏதொன்றாவது ஆத்மாவின் தர்மமாக இருந்தால், ஆத்மா பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் அப்படி இல்லையே? எல்லாச் செயல்களையும் நாம் செய்கிறோம்.

வெவ்வேறு சமயங்களில் நாம் வெவ்வேறு செயல்களை செய்து கொண்டு இருக்கிறோம்.

ஒரே சமயத்தில் எல்லாச் செயல்களையும் செய்கிறோம் என்றும் சொல்ல முடியாது. ஏனென்றால் ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு செயலைத்தான் செய்ய முடியும்.

இதிலிருந்து என்ன தெரிகிறது? ஆத்மாவிற்கு எந்தவிதச் செயலும் கிடையாது. ஆத்மாவிற்குச் சுயமாக கர்த்ருத்வம் கிடையாது" என்ற இந்த உண்மை தெரிகின்றது. இது மிக முக்கியமாய்த் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம். இந்த ஆத்மஸ்வரூபத்தைப் பற்றி மேலும் விசாரிப்போம்.

## தூக்கத்தில் 'நான்' எங்கே ?

**சா**தாரணமாகப் பார்த்தால் நாம் ஒன்றுமே செய்யாமல் ஒரு நிமிடம் கூட இருக்க முடியாது என்று தெரிகிறது. பார்ப்பதோ, கேட்பதோ, நினைப்பதோ போன்ற ஏதாவது ஒரு செயலை நாம் செய்து கொண்டுதான் இருக்கிறோம். ஆனால் கூர்ந்து கவனிக்கும்போது ஒவ்வொரு சமயத்தில் அரை வினாடி நாம் பார்ப்பதோ கேட்பதோ ஒன்றுமே செய்யாமலும் இருக்கிறோம். உதாரணமாக இரு எண்ணங்களுக்கு மத்தியில் இந்தநிலை ஏற்படுகிறது. ஆழ்ந்த உறக்கத்தில் மனம், புத்தி, இந்திரியங்களினால் ஆகக்கூடிய காரியங்கள் ஒன்றுமே நடப்பதில்லை. நான் கர்த்தா என்று சொல்லும் கர்த்ருத்துவமும் அங்கு இல்லை.

"நான் உறங்குகிறேன்" என்று உறங்குபவன் கூறுவதில்லை. நான் உறங்குகிறேன் என்று நினைப்பதும் இல்லை. அப்போது உலக அனுபவமே இல்லாமல் போய்விடுகிறது. நாம் பயந்து கொண்டிருந்த இந்த (பிரம்மாண்டமான) உலகமே போய்விடுகிறது. ஏனென்றால் மனமும் இந்திரியங்களும் அப்போது வேலை செய்வதில்லை. இதிலிருந்து கர்த்தா, கரணங்கள் எல்லாம் அடங்கிவிட்டது என்று தெரிகிறது.

எல்லாமே ஒரேயடியாகப் போய் விட்டதா என்று கேட்டால், இல்லை. எல்லாம் ஒடுங்கினாலும் "நான்" என்று சொல்லும் பொருளானது போவதில்லை. எப்படி எனில், "நான் நன்றாகத்

தூங்கினேன்" என்று விழித்த பின்பு இவன் கூறுகிறான்! நான் என்றவஸ்து உறக்கத்தில் இல்லை என்று சொன்னால், "நான் நன்றாகத் தூங்கினேன்", என்று இவன் விழித்ததும் சொல்ல முடியாது. இதனால் "நான்" என்பவன் உறக்கத்திலும் இருக்கிறான் என்று தெரிகின்றது.

இவ்விதம் கேட்பது, பார்ப்பது, நடப்பது, சிந்தனை செய்வது போன்ற செயல்களைச் செய்யும் போதும், "நான்" இருக்கிறேன், இவைகள் எல்லாம் இல்லாதபோதும் நான் இருக்கிறேன். எனவே செயல், செயல் அற்றது என்ற இரண்டு நிலைகளிலும் நான் இருக்கிறேன். இதிலிருந்து இந்த "நான்" என்பது எல்லாக் கிரியைகளையும் விட்டுவிட்டுத் தானாகக் கிரியைகள் அற்று இருக்கவும் கூடியது என்று தெரிகிறது.

இந்தக் கிரியைகளுக்கும் நான் என்பதற்கும் ஏதாவது சம்பந்தம் உண்டா என்றால் இல்லை. ஆத்மாவிற்குச் சுயமாகச் செயல்களுடன் ஒருவித சம்பந்தமும் கிடையாது. ஆத்மாவிற்கு இந்தக் காரியங்கள் எல்லாம் சுயமாகவே, ஸ்வரூப தர்மமாகவே இருக்குமானால், "நான்" என்ற அந்த ஆத்மாவிற்கு அவைகளை விட்டு விட்டு இருக்க முடியாது. எப்படி நெருப்பானது தன் தர்மமான சூட்டை விட்டு இருக்க முடியாதோ அதுமாதிரி.

ஆனால் மேற்கண்ட மாதிரி பல சமயங்களில் ஆத்மாவானது வெவ்வேறு செயல்களுடன் கூடி இருக்கிறது. சில சமயங்களில் உறக்கத்தில் - எல்லாக் காரியங்களையும், கர்த்ருத்துவத்தையும் விட்டு விட்டும் இருக்கிறது. எனவே கர்த்ருத்துவமோ, செயல்களோ ஆத்மாவின் தர்மம் இல்லை என்று தெளிவாகத் தெரிய வருகிறது. ஆத்மா என்பது தாமரை இலைத் தண்ணீர் போல, அசங்காமல், எதிலும் ஒட்டாமல் இருக்கிறது. கிரியைகளோடு சேர்ந்து இருக்கும்போது அவைகளில் ஒட்டுவது இல்லை. "நான்" என்ற ஆத்மா எந்தக் காலத்திலும் எதிலும் ஒட்டாமல் நிர்மலமாகவே இருக்கிறது. இதுதான் மிகச் சிறந்த உண்மை.

இந்த உண்மையை உணராமல் இவன் "என்னை,உலகம் தொந்தரவு செய்கின்றது" என்று சொல்லுகின்றான். எங்கே உலகம் இவனைத் தொந்தரவு செய்கின்றது? நமக்குத் தொந்தரவு கொடுக்கக்கூடிய சக்தி உலகத்திற்கு எங்கே இருக்கிறது? உலகத்திற்கும் ஆத்மாவிற்கும் உறவு இருந்தால்தானே

ஆத்மாவிற்குத் தொந்தரவு செய்யும் சக்தி உலகத்திற்கு இருக்க முடியும். ஆத்மா தான் உறவு அற்றுத் துறவியாகவே இருக்கிறதே. ஆத்மா எப்போதுமே துறவிதான். துறவி ஆக வேண்டியது இல்லை.

## ஆத்மா ஒரு நடிகன்

நாம் வெவ்வேறு கர்மாக்களைச் செய்யும்போது அந்த அந்தக் கர்மாக்களுடனும், கரணங்களுடனும் ஆத்மாவைச் சேர்த்தே பார்க்கிறோம். பேசும் போது "நான் பேசுபவன்", பார்க்கும்போது "நான் பார்ப்பவன்" சிந்தனை செய்யும் போது "நான் சிந்திப்பவன்", ராகத்தோடு (ஆசைகளோடு) இருக்கும்போது "நான் ராகி", துவேஷத்தோடு இருக்கும்போது "நான் துவேஷி", தேகத்தோடு ஒன்றுபட்டு இருக்கும்போது "நான் ஆண், நான் பெண், நான் உயரமானவன், நான் குட்டையானவன்", என்று இவ்விதம் நான் என்ற வஸ்துவானது ஏற்கும் பாத்திரங்கள் வேறுபட்டும், மாறிக்கொண்டேயும் இருக்கின்றன.

உலகத்தில் உறவை வைத்துப் பார்க்கும்போது மறுபடியும் "நான் மனைவி", "நான் மகள்", நான் தொழிலாளி", "நான் முதலாளி", "நான் நண்பன்" என்று பல பெயர்கள் இவனுக்கு உள்ளது.

ஒருவர் நாடக மேடையில் நடிக்கின்றார். பெரிய நடிகர் திலகம் இவர். நாடகத்தில் ராஜாவேஷம் போடுகின்றார். அந்த ராஜாவிற்கு நாடகத்தில் பலவித கஷ்டங்கள் ஏற்படுகின்றன. ராஜாவாக நடிப்பவனுக்கு இதனால் ஏதாவது துக்க அனுபவம் ஏற்படுகின்றதா? இல்லை.

முதலிலேயே பணக்காரனாக இருக்கும் நடிகன் ஒருவன் பிச்சைக்காரனாய் நடிக்க ஒப்புக் கொண்டான். இதனால் தான் மேலும் பணம் சம்பாதிக்கப் போகிறோம் என்று அவனுக்குத் தெரியும். அங்கு நாடக மேடையில் நிஜமான பிச்சைக்காரன்கூட, ஏமாறும் விதத்தில் நடிக்கிறான். உண்மையாகவே கண்களில் கண்ணீர் வடிகிறது. சோகமான பாட்டுக்களைப் பாடுகிறான்.

ஒவ்வொரு பிச்சைக்காரனிடமும் ஒரு குறிப்பிட்ட பிச்சைக்காரத்தனம்தான் இருக்கும். அவைகள் எல்லாவற்றையும் ஒருங்கே இவன் வெளிப்படுத்திக் காட்டுகிறான். ஓரிடத்தில் பிச்சை

எடுக்கும் கப்பரையும் திருடு போய்விட்டது. அப்போது, "இது என்ன வாழ்க்கை!" என்று தாளமுடியாமல் கண்ணீர் விட்டழுகிறான். இதைப் பார்த்துக் கொண்டிருந்தவர்களும் தாங்க முடியாமல் அழுதுவிட்டார்கள்.

அப்போது உள்ளுக்குள்ளே இவன் என்ன நினைக்கிறான்? "ஆஹா! நாம் நன்றாகவே நடிக்கின்றோம்" என்று உள்ளூர சந்தோஷம் இவனுக்கு. நடிப்பு முடிந்த பின்பு இவனிடம் சென்று, "நீ எவ்வளவு நன்றாக அழுதாய்? மிகத் திறமையாக நடித்தாய்" என்று கொண்டாடுகிறார்கள். இது சாராதண நடிப்பு இல்லை என்று புகழ்கிறார்கள்.

மறுதினம் உண்மையாகவே அவனுடைய மனைவி இறந்துவிட்டாள். அவன் மனைவியினுடைய பிரிவினால் தேம்பித்தேம்பி அழுது கொண்டிருக்கிறான். அப்போது அவனுடைய நண்பன் ஒருவன் அவனைப் பார்த்து, "நேற்றைவிட இன்று நன்றாய் நடிக்கின்றாய்" என்று சொல்ல முடியுமா? முடியாது. ஏன் என்றால் அது பொய் நாடகம்.

வாழ்க்கை உண்மை என்று இவன் நினைத்துக் கொண்டிருக்கிறான். இதுவும் ஒரு நாடகம்தானே! ஆத்மா அகர்த்தா தானே ! எந்தச் செயல்களோடும் சம்பந்தம் எதுவும் இல்லாமல் தானே இருக்கிறது. இவன் ஏன் அழுகிறான்? கணவன் என்ற பாத்திரத்தை நினைத்துத்தானே, மனைவி இல்லாததால் வருத்தமும் துக்கமும் ஏற்பட்டு இவன் அழுகிறான்.

இந்தக் கணவர் என்பது ஆத்மாவினுடைய தர்மமோ? (இயல்பான குணமா?) கணவன் என்பது ஆத்மாவுக்குத் தர்மமாக இருந்தால் அழவேண்டியது தான். ஆனால் அப்படி இல்லை. எப்போது நீ கணவன் ஆனாய்? பிறக்கும்போதே கணவனாகவா பிறந்தாய்? மனைவி வந்து அவனோடு தொடர்பு கொள்ளும் போதோ அல்லது அவனை நினைக்கும் போதோதான் கணவன். இதுபோலத் தான் பணக்காரன் என்பதும்.

பணக்காரன் என்றால் என்ன இருக்கும்? அவனும் மூன்று இட்லிதான் சாப்பிட முடியும். இல்லை ஆறு இட்லி சாப்பிடலாம். அதற்கு மேல் சாப்பிட முடியுமா? பணக்காரன் என்றால் எத்தனை நாற்காலியில்தான் உட்கார முடியும். இரண்டு நாற்காலிகளில் ஒரே

சமயத்தில் உட்கார முடியாது. இவனுக்கு ஏழு கார்கள் இருந்தாலும் ஒரு சமயத்தில் ஒரே காரில்தான் போக முடியும். முன்னே உட்கார்ந்தால் பின்னால் உட்கார முடியாது.

பணக்காரன் என்றால், இவன் பாங்கில் உள்ள பணத்தை எல்லாம் நினைத்துக் கொண்டே இருந்தால்தான் பணக்காரன். "எனக்கு, இவ்வளவு பணம் இருக்கிறது" என்று நினைத்தால்தான் இவன் பணக்காரன். எனவே, கணவன் பணக்காரன் போன்ற இவைகள் ஆத்ம தர்மம் இல்லை. இவைகள் ஆத்மாவின் தர்மமாக இருந்தால், நினைக்க வேண்டிய அவசியம் இல்லை.

நெருப்பு சூடாக இருப்பது, தானோ மற்றவர்களோ நினைப்பதினாலா? இல்லை. ஸ்வபாவமாகவே நெருப்பு சூடாக இருக்கிறது. அதுபோல, கணவனாய், மனைவியாய் இருப்பது ஆத்மாவிற்கு சொந்த தர்மமானால் நினைக்க வேண்டிய அவசியம் இல்லை. ஆகையினால் ஆத்மாவிற்கு எந்தவித தர்மமும் இல்லை. இவைகள் எல்லாம் ஆத்மாவிற்கு நாடகத்தின் பாத்திரங்கள் போலவேயாகும்.

நடிப்பு என்றால் பாத்திரங்களுக்கு ஏற்றாற்போல வசனங்கள் இருக்கும். அதன்படித்தானே நடித்தாக வேண்டும். அதுபோல, நாம் இந்த உலகமான நாடக மேடையில் ஏறிவிட்டோம். ஏறிய பின்பு நடித்துத்தானே ஆக வேண்டும். நடிக்க மாட்டேன் என்று சொன்னால் தயாரிப்பாளர் நம்மை விட்டுவிடுவாரா? நடிப்பதினால் நமக்கு என்ன நஷ்டம்? நடிப்பதில் ஓர் ஆனந்தம் இருக்கிறது. எனவே வசனப்படி நடிக்க வேண்டியது நாம் தெரிந்து கொள்ள வேண்டியதாகும்.

## பாத்திரத்தின் துக்கம் நடிகனைச் சேர்ந்தது அல்ல !

**யா**ரைக் கேட்டாலும் நிறையக் கஷ்டங்கள் இருப்பதாய்த்தான் கூறுகிறார்கள். இது உண்மையா என்று பார்ப்போம். ஒவ்வொரு பாத்திரத்திற்கும் ஒரு சில கஷ்டங்கள் இருக்கத்தான் செய்யும். தன்னைத் தந்தையாகப் பார்க்கும் போது "என் பையன் சரியாகப் படிப்பதில்லை, சொன்னபடி கேட்பதில்லை" என்ற கஷ்டம் இருக்கும். தந்தை என்பது ஒரு பாத்திரம்தானே. அப்பா என்றால்

எல்லோருக்குமே அப்பாவா என்ன ? இல்லையே. அப்பா என்பதும் ஒரு பாத்திரத்தின் நடிப்புதான்.

பாத்திரத்தை வைத்துக் கஷ்டங்கள் வெவ்வேறு விதமாக இருக்கின்றன. இதுபோல, தன்னைப் புத்திரனாக வைத்துப் பார்க்கும்போதும் "அப்பா நான் எதிர் பார்க்கும் மாதிரி நடப்பதில்லை, எப்போதும் கண்டித்துக் கொண்டே இருக்கிறார்" என்ற கஷ்டம் உள்ளது.

இம்மாதிரி எஜமானன், தொழிலாளி, நண்பன், சத்ரு, குடிமகன், முதலாளி எல்லாப் பாத்திரங்களிலும் ஒருவித துக்கம் உள்ளது.

தேகத்தை வைத்துப் பார்க்கும்போது "வயது ஆகிவிட்டது" "நடக்க முடிவதில்லை", "கையில் எடுக்க வருவதில்லை", என்ற கஷ்டங்கள். இதுவும் ஒரு பாத்திரம் தான்.

கரணங்களை வைத்துப் பார்க்கும் போது, "நான் ஊமை", "நான் செவிடன்","நான் முடவன்" என்று நினைக்கிறான். மனதை வைத்துப் பார்க்கும்போது "நான் சஞ்சலம், மனச் சோர்வு முதலானவை உடையவன். எனக்கு ஞாபக சக்தி இல்லை", என்று சொல்லி ஆத்மாவிற்கு இந்த குணங்களைச் சேர்க்கிறான். இவ்விதம் நான் என்ற பொருளுக்கு உண்மையில் எதனுடனும் சம்பந்தம் இல்லாமல் இருந்தாலும் வியவஹாரத்தில் அது எல்லாவற்றுடனும் சேர்ந்து இருப்பது மாதிரி தெரிகின்றது.

ஆத்மாவானது கணவனையோ, மனைவியையோ, பணத்தையோ, புகழையோ, தேகத்தையோ, கரணங்களையோ, நம்பி இல்லை. ஆனால் அவைகள் எல்லாம் ஆத்மாவை நம்பி இருக்கின்றன. அவைகளுக்கு ஆத்மாவினால் தான் இருப்பு கிடைக்கிறது. ஆத்மாவின் இருப்பு இல்லாமல் பாத்திரங்கள் இருக்க முடியாது. ஆத்மாவின் இருப்பானது எதையும் நம்பி இல்லை.

இப்போது, தந்தை என்றால் துக்கம், மனைவி என்றால் துக்கம், எஜமானன் என்றால் துக்கம் என்று சொல்லும்போது இந்தத் துக்கங்கள் எல்லாம் எதற்கு? பாத்திரத்திற்குத்தான். இது புரிந்தால் இவனுக்குத் துக்கம் ஏன் வருகிறது?

துக்கம் இல்லாமல் இருப்பது என்றால் எவ்விதம்? "தந்தை" என்பதை விட்டு விட்டால் துக்கம் போகும் என்றால் எவ்விதம்

தந்தை என்ற பாத்திரத்தை விடுவது? சரி, குழந்தைகளை விட்டு விடுகிறேன் என்றால், குழந்தைகளை விட்டு விடலாம். ஆனால் தந்தையாய் விட்ட நிலையை எவ்விதம் விடுவது? "நான் தந்தை" என்ற புத்தி ஒன்று உள்ளே உள்ளதே. அது எங்கே போகும்?

"நான் ரிஷிகேஷ் பேய்விடுகிறேன்" என்று அங்கு போனால் அங்கும் இதைத் தான் நினைத்துக் கொண்டிருப்பான். அதாவது "நான் எல்லாவற்றையும் விட்டு விட்டேன்" என்று விட்டதை நினைத்துக் கொண்டிருப்பான். ஆனால் விட்டதில் இவனுக்கு இன்னும் மதிப்பு இருக்கிறது. ஆகையினால் இன்னும் அது இவனை விடவில்லை என்று அர்த்தம்.

ஒரு சிறு பையன் இருக்கிறான், அவனுக்கு கோலி விளையாடுவதில் மிக விருப்பம். ஐம்பது கோலிகள் அவன் சேர்த்து வைத்திருந்தான். அது அவனுக்குப் பொக்கிஷம் மாதிரி. அவன் வாழ்க்கையே அதில்தான் இருக்கிறது. தினமும் காலையில் கோலிகளை எடுத்து எண்ணி, எண்ணி வைப்பான். தம்பி (எங்கே) எடுத்து இருப்பானோ என்று பயம்.

இவன் கோலி விளையாடும்போது கைகள் எல்லாம் அழுக்காகிவிடுகிறது. எனவே இதைப்பார்த்த தந்தை அவனிடம், "இன்று முதல் இந்தக் கோலி விளையாட்டை விட்டு விடு" என்று கூறினார். அங்குள்ள மற்றப் பிள்ளைகள் கோலி விளையாடும் போது இவனுக்குக் கோலியை விட மனம் வரவில்லை. ஆனால் தந்தையுடைய விருப்பத்திற்கு மதிப்புக் கொடுப்பவனாதலால் அப்பாவிடம் வந்து.

"நான் கோலியை விட்டுவிட்டேன்" என்று சொன்னான். சொல்வது நன்றாகத்தான் இருந்தது. தந்தை அதைக் கேட்டு,

"மிக்க சந்தோஷம் நல்ல வேலை செய்தாய்" என்றார். ஆனால் அவனுக்கு உள்ளூர பயம். வெளியே சென்றால் மற்றவர்கள் கோலி விளையாடுவதைப் பார்த்து தானும் விளையாடி விடுவோமோ என்று பயந்து வெளியில் போவதற்கு விருப்பம் இல்லாமல் பலநாட்கள் வீட்டினுள் உள்ளேயே இருந்தான். ஆனால் நினைவெல்லாம் கோலி விளையாடுவதுபற்றியே! இதற்குப் பெயர் விட்டுவிட்டேன் என்பது, எங்கே விட்டான்?

இப்போது அதே பையன் தாத்தாவாக ஆகிவிடுகிறான் என்று வைத்துக் கொள்வோம். அவர் ஒருவரிடம் சென்று "நான் கோலி விளையாடுவதை விட்டு விட்டேன்" என்று சொன்னால் எப்படி இருக்கும்? "என்ன கோலியை விட்டு விட்டீர்களா? மருந்து கோலி சாப்பிடுவதையா விட்டு விட்டீர்கள்" என்றுதான் அவர் திருப்பிக் கேட்பார். சிறுபையன் இவ்விதம் "கோலி விளையாடுவதை விட்டுவிட்டேன்" என்று சொன்னால் பொருத்தமாக இருக்கும். ஆனால் தாத்தாவான பெரியவர் சொன்னால் "ஐயோபாவம்" இன்னும் குழந்தை மனநிலை போகவில்லை என்று நினைப்போம்.

ஒரு சந்யாஸி, "நான் பெரிய பதவி, வேலை, சொத்துக்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டேன்" என்று சொன்னார் என்று வைத்துக்கொள்வோம். இதற்கு என்ன அர்த்தம்? இன்னும் தான் விட்டதில் இவருக்கு நினைப்பு இருக்கிறது. மனப்பக்குவம் வரவில்லை என்றுதான் தெரிகிறது. முன்னால் சொன்ன சிறு பையன் எப்படி கோலி விளையாட்டை விட்டுவிட்ட போதிலும், அதன்மேல் மதிப்பு வைத்திருந்ததனால் வெளியில் வரபயந்தானோ, அதுபோலத்தான் இது.

பாத்திரங்கள் இருந்தால்தானே கஷ்டம், எல்லாவற்றையும் விட்டுவிட்டுப் போகிறேன் என்றால், எங்கே போவது? எனவே எதையும்விட வேண்டிய அவசியம் இல்லை. ஆத்ம ஏற்கெனவே எல்லாவற்றையும் விட்டுவிட்டுத்தான் இருக்கிறது. உள்ளே, வேஷம் போடுபவனை வேஷம் பிடித்துக் கொண்டிருக்கிறதா என்ன? அவன் எல்லாவற்றையும் விட்டுவிட்டுத்தான் இருக்கிறான். வேஷம் போடுபவனுக்கும், வேஷம் போடாதவனுக்கும் என்ன வித்யாசம்? ஒன்றும் இல்லை. வேஷத்தை வேஷமாய் யார் தெரிந்து கொள்கிறானோ அவனுக்கு அந்த வேஷத்தினுடைய கஷ்ட, நஷ்டங்களும் சுகதுக்கங்களும் ஏற்படாது. அதற்குத்தான் வேஷம் எனறு பெயர்.

"சுவாமிஜி! கஷ்டமே இல்லாத வேஷம் கிடைக்குமா?" என்று ஒருவன் கேட்டான். அப்படி ஒரு வேஷம் போட்டு என்ன பிரயோஜனம்? அதில் ரசனை ஏது? பாத்திரம் என்றால் எல்லாம் கலந்துதான் இருக்கும்.

ஒரு காண்டிராக்டருக்கு சிறு வயதிலிருந்தே தான் இருக்கும்

ஊரில் ஒரு கால்பந்தாட்ட விளையாட்டுத் திடல் கட்ட வேண்டும். அங்கு கால்பந்தாட்டப் பந்தயங்கள் நிகழ்த்த வேண்டும்" என்று ஆசை. பின்னால், தன் விருப்பம்போலவே பெரிய பந்தய மைதானம் அமைத்தார். அதில் விளையாட விம்கோ கம்பெனி, மோகன் மேகின் என்ற இரண்டு அணிகளைத் தேர்ந்தெடுத்தார்.

இந்தக் கால்பந்தாட்ட பந்தய விழாவிற்கு மந்திரியை வரவழைத்திருந்தார். தன் சுற்றத்தார் பலரையும் அழைத்திருந்தார். இவர் குடும்பத்தில் பெரியவரான, கிராமத்தில் இருந்த இவரது பாட்டனார் விளையாட்டைப் பார்க்க வந்திருந்தார். இவர் கால்பந்தையோ, இந்த விளையாட்டையோ இதுவரை பார்த்ததே கிடையாது. இந்தப் பாட்டனாரைத் தன் அருகில் அமர்த்திக் கொண்டு விளையாட்டைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தார் காண்டிராக்டர். விளையாட்டைப் பார்க்க வந்திருந்தவர்கள் ஆரவாரம் செய்துகொண்டும் விளையாட்டை ரசித்துக் கொண்டும் இருந்தார்கள்.

ஆனால் பாட்டனார் மட்டும் வருத்தமாக இருந்தார். இதைக் கவனித்த காண்டிராக்டர்,

"ஏன் வருத்தமாக இருக்கிறீர்கள்?" என்று விசாரித்தார்.

அதற்குப் பெரியவர், "உன்னைப் பற்றி ஒரு விஷயம் எனக்குப் புரியவில்லை. நீ இவ்வளவு லட்சக் கணக்கில் செலவு செய்தாய். இறுதியில் நீ கருமியாகி விட்டாயே என்றுதான் கவலை" என்றார்.

இதைக்கேட்ட காண்டிராக்டர் "எங்கே நான் கருமியானேன். புரியவில்லையே, நீங்கள் சொல்வது. இவ்வளவு பணம் செலவு செய்து நன்றாகத்தானே செய்திருக்கிறேன். எங்கே கருமித்தனம் என்று சரியாக விளங்கும்படி கூறுங்கள்" எனக் கேட்டார்.

அதற்குப் பெரியவர், "அங்கு இருபத்திரண்டு பேர்கள் விளையாடுகின்றார்கள். நீயோ ஒரே ஒரு பந்தைக் கொடுத்து விளையாடச் சொல்லி இருக்கின்றாயே, அவர்கள் அனைவரும் ஒரு பந்தை விரட்டிக் கொண்டு ஓடுகின்றார்கள். ஆளுக்கு ஒரு பந்து கொடுத்திருக்கலாம். இதில் உனக்கு என்ன குறைந்து விட்டது?" என்று கேட்டார்.

இருபத்திரண்டு பந்துகளை விளையாடப் போட்டால் விளையாட்டு எங்கு இருக்கும்? ஆளுக்கு ஒரு பந்து எடுத்துக்

கொண்டுபோய்விடுவார்கள். ஒருபந்து தான், அப்போதுதான் அது விளையாட்டு.

அதே போல் பாத்திரம் என்று சொன்னால் சுகமாகவே இருக்கும் பாத்திரம் என்று ஒன்றும் கிடையாது. நடுவில், இப்படி அப்படி இருக்கத்தான் இருக்கும். அப்போதுதான் நாடகம் ரசனையாக இருக்கும். பாத்திரம் என்றால் சுகதுக்கங்கள் கலந்துதான் இருக்கும். அப்போதுதான் நாடகம் என்பது பார்க்கக் கூடியதாக இருக்கும்.

தோல்வியோ, துக்கமோ, சண்டையோ, போட்டியோ, எதிர்ப்போ இவைகள் எவையுமே இல்லாமல் உள்ள சில பாத்திரங்களை வைத்துச் சினிமா எடுத்தால் அதை யார் பார்ப்பார்கள்? டைரக்டருடைய மனைவிக் கூட பார்க்கமாட்டாள்.

பாத்திரங்கள் எப்படி இருந்தாலும் நாடகத்தில் நடிக்கலாம். ஆனால் நான் நடிகன் என்று தெரிந்து கொள்ள வேண்டும். அது தெரியவில்லை என்றால் கஷ்டங்கள் எல்லாம் நம்முடைய கஷ்டங்களாகி நாடகம் என்பது வாழ்க்கையாக மாறிவிடும். எனவே இந்த வாழ்க்கையே ஒரு நடிப்புத்தான் என்று நன்கு தெரிந்து கொண்டு ஆத்மாவிற்கு எதனுடனும் சம்பந்தம் இல்லை என்று அறிந்து கொண்டு நடித்தால் திறம்பட நடிக்கலாம். பாத்திரங்களுடைய கஷ்டங்கள் நம்மைப் பாதிக்காது. நடிப்பு, நடிப்பாக இருப்பதற்கு ஆத்மாவானது அகர்த்தாவாக இருக்கின்றது என்ற உண்மை இவனுக்குத் தெளிவாகத் தெரிய வேண்டும். ஆத்மாவானது ராக, துவேஷங்கள், கர்த்ருத்வம் இல்லாமல் ஆனந்த சொரூபமாக இருக்கின்றது என்று தெரிந்து கொள்வதற்குத் தான் கர்மயோகம் என்று வைத்திருக்கின்றார்கள்.

## பானைக்கு ஒரு குறை !

எல்லா மனிதர்களுக்குமே ஒரு முக்கியமான ஆசை உள்ளது. என்ன ஆசை? "இது வேண்டும், அது வேண்டும்",என்று கேட்டாலும் கூட, தன்னிடம் உள்ள, வேண்டும்... வேண்டும்.... வேண்டும்.... என்ற அடிப்படையான ஒரு குறையை, அதிருப்தியைப் போக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஆசையே அது.

அதனால் எல்லோருமே "நான் பூர்ணமாக ஆக வேண்டும்.

பூர்ணத்தை அடைய வேண்டும்" என்று ஆசை கொள்கிறார்கள். ஆனால் பூர்ணமான வஸ்துவானது எந்த ஒரு பொருளாலும் அடையப்பட முடியாதது. காரணம் என்னவென்றால், இவன், "எனக்குப் பல குறைகள் உள்ளன. நான் அல்பன்" என்று தன்னை நிச்சயித்துக் கொண்டு, பிறகு நான் பூர்ணத்தை அடைய வேண்டும் என்று ஆசைப்பட்டுப் பலவிதமான பொருள்களை சேர்க்கிறான்.

உதாரணமாக வீடு இல்லாமல் இருந்தவனுக்கு வீடு கிடைத்தது என்று வைத்துக் கொள்வோம். அந்த வீடு பூரணம் இல்லையே? பணமோ, பதவியோ எது கிடைத்தாலும்கூட அதோடு தன்னைச்சேர்த்துப் பார்க்கும்போது, அப்போதும் அதிருப்தி இருந்து கொண்டேதான் இருக்கும்.

ஒரு பானையை எடுத்துக் கொள்வோம். அது பத்து லிட்டர் ஆகாசம் (வெளி) கொள்ளக் கூடியது. "நான் பத்து லிட்டர் ஆகாசம் கொள்ளும் பானை. இருபது லிட்டர் ஆகாசம் கொள்ளும் பானையானால் எனக்குக் குறை இருக்காது. நான் திருப்தனாகிவிடுவேன்" என்று அந்தப்பானை நினைக்கிறது.

இருபது லிட்டர் ஆகாசம் உடைய பானையை "நீ எப்படி இருக்கின்றாய்?" என்று கேட்டால், அது, "ஐம்பது லிட்டர் ஆகாசம் கொள்ளக் கூடியதாக நான் மாறினால் எனக்குக் குறை இருக்காது நான் பெரியவனாகி விடுவேன்" என்று கூறும்.

இவ்விதம் எவ்வளவு பெரிய பானையாக இருந்தாலும், அதனிடம் ஒரு பற்றாக்குறை இருக்கத்தான் செய்யும். நான் அபூர்ணன் என்ற அதிருப்தி எல்லோரிடமும் இருக்கிறது.

மேலே சொன்ன பத்து லிட்டர் பானையில் இருக்கக் கூடிய ஆகாசம் இருக்கின்றதே. அதை "நீ அல்பமா?" என்று கேட்க வேண்டும். பானையில் இருக்கக்கூடிய ஆகாசம், வெளியிலிருக்கக்கூடிய ஆகாசத்திற்கு அப்பாற்பட்டு இல்லை. பானையே ஆகாசத்தில்தானே இருக்கிறது! எங்கும் நிறைந்துள்ள ஆகாசத்திற்கு வரையறை போடமுடியாது. பூர்ணமாக இருக்கக்கூடிய ஆகாசமாகவே இருக்கிற இந்தப் பானை-ஆகாசம், "பத்து லிட்டர் ஆகாசம்" என்று இப்படி நினைப்பதினால் ஏற்படக் கூடியதே. அதன் கஷ்டங்கள் எல்லாம். இந்தப் பற்றாக்குறை நினைப்பை மறக்கும்போதெல்லாம் ஆனந்தம் வெளிப்படுகிறது.

தேகத்தை நான் என்றும், மனதை நான் என்றும், எனக்குத் துக்கம் இருக்கின்றது என்றும், இவைகள் நீங்கி தேவைகள் எல்லாம் பூர்த்தியானால் நான் "சுகம் அடைவேன் என்றும் மனிதன் நினைக்கிறான். எந்தச் சமயத்தில் தான் "நான் அல்பன், குறையுள்ளவன்" என்பதை மறக்கிறானோ அப்போது அவனுக்கு ஆனந்தம் ஏற்படுகிறது.

தன்னை மறப்பதினால் தான் மனிதனுக்குத் தூக்கத்தில் ஆனந்தம் ஏற்படுகிறது. நேற்று தூங்கினேன். இன்றும் தூங்கினேன், நாளைக்கு ஏன் தூங்க வேண்டும்? தினந்தோறும் தூங்க வேண்டுமா? என்று யாருமே கேட்பது இல்லை. எல்லோருக்குமே, தூக்கத்தில் ஆனந்தம் ஏற்படுவதினால் தூங்க வேண்டும் என்றுதான் ஆசை, தூக்கத்திலிருந்து வெளிவருவதற்குத் தான் கஷ்டம்.

எவ்வளவு முறை எழுப்பினாலும், தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டு வெளியில் வருவது மிகுந்த சிரமமான காரியம். விழித்த பிற்பாடு சிலருக்குப் படுக்கையிலிருந்து எழுந்து வெளியில் வருவதற்கு அரைமணி நேரத்திற்கும் மேல் ஆகிவிடும். "காபி தயாராகிவிட்டது" என்றால்தான் சிலர் எழுந்து வருவார்கள். மற்றும் சிலரோ, காபியைச் சாப்பிட்டுவிட்டு மறுபடியும் படுத்துக் கொள்வார்கள், விட்ட தூக்கத்தை நிறைவு செய்வதற்காக.

இதற்குக் காரணம் என்னவென்றால், தூக்கத்தில் இருக்கும் ஆனந்தத்தை விட்டு வெளியில் வருவதற்கு இவனுக்கு விருப்பம் இல்லாததுதான்.

தூக்கத்தில் இது வேண்டும், அது வேண்டும் என்ற எண்ணங்கள் இல்லாமல் எந்தவித குறைகளுமின்றி ஆனந்தமாக இருப்பதால் தூக்கத்தை எல்லோரும் விரும்புகிறார்கள். அதை விட்டு வெளிவருவதற்கு யாரும் விரும்புவது இல்லை.

விழித்துக் கொண்டிருக்கும் போது கூட எப்போதெல்லாம் இவனுக்குப் பற்றாக் குறைகள் இல்லையோ, அப்போதெல்லாம் ஆனந்தம்தான்.

குறைகளை உடையவன் நான் என்று தன்னைப் பற்றியோ அல்லது பற்றாக்குறைகளைப் பற்றியோ எண்ணங்கள் இல்லாதபோதெல்லாம் இவனுக்கு ஆனந்தம்தான் இருக்கிறது. அந்த சமயத்தில் என்ன ஏற்படுகிறது? எப்போதும் உள்ள ஆனந்த

ஸ்வரூபமான ஆத்மாதான் வெளிப்படுகிறது. வெளிப்படையாகத் தெரிகிறது.

மேலே சொன்ன பானை "நான் சிறிய பத்து லிட்டர் பானை பத்து லிட்டர் ஆகாசம்தான் கொள்ளக் கூடியவன்" என்ற இந்தக் குறைகளை மறக்கும்போது ஆனந்தமும், அவைகளை நினைக்கும் போது துக்கமும் அடைகிறது. பானையின் இந்தத் துக்கம் நீங்க, அதற்குப் பூர்ணத்வம் வேண்டும். அந்தப் பூர்ணத்வம் எப்படிக் கிடைக்கும்? "எங்கும் இருக்கும் ஆகாசம் என்னிலும் இருக்கிறது. ஆகாசம் ஒன்றேதான். நானே அகண்ட ஆகாசம்" என்று பானை தெரிந்து கொள்ள வேண்டும். இதற்குத்தான் ஞானம் என்று பெயர்.

இந்த உலகத்தை நாம் மூன்று விதமாகப் பார்க்கின்றோம். ராகம் (விருப்பு) த்வேஷம் (வெறுப்பு) ஔதா சீன்யம் (விருப்பு வெறுப்பற்ற நிலை) என்பதே இவைகள்.

## விருப்பு (ராகம்)

**வி**ருப்பு என்பது, "இது எனக்கு வேண்டிய பொருள். இதை நான் அடைய வேண்டும். இதனால் எனக்கு சுகம் கிடைக்கும். ஆகையால் இந்தப் பொருள் க்ஷேமமாக இருக்க வேண்டும். இது என்னை விட்டுப் பிரியக் கூடாது" என்ற இச்சை. இந்த இச்சையோடுதான் மனிதன் உலகத்தைப் பார்க்கிறான்.

## வெறுப்பு (த்வேஷம்)

"**இ**து எனக்கு வேண்டாத பொருள். இது என்னிடம் இருக்கக் கூடாது. மரணம், வயோதிகம், வியாதி முதலிய நிகழ்ச்சிகள் எல்லாம் ஏற்படக் கூடாது. நஷ்டம் வரக்கூடாது. இவைகள் எல்லாம் எனக்குக் கஷ்டங்களைத் தருபவை. துக்கத்தைத் தரும் இந்தச் சம்பவங்கள் எல்லாம் எனக்கோ, என்னைச் சேர்ந்தவர்களுக்கோ வரக்கூடாது. துக்கத்தைத் தருபவன் யாராவது இருந்தால் அவனும் என்னிடம் வரக்கூடாது" என்ற நினைப்பே வெறுப்பு எனப்படும் த்வேஷம் துக்கத்தைத் தரும் பொருள்களிடமோ, மனிதர்களிடமோ, நிகழ்ச்சிகளிடமோ ஏற்படுகிறது. இந்தத் த்வேஷத்தோடும் மனிதன் உலகத்தைப் பார்க்கிறான்.

## விருப்பு வெறுப்பற்ற நிலை

இது மூன்றாவது வகை ஔதா சீன்யம் உள்ளவனுக்கு எந்தவிதமான விருப்பும் கிடையாது. வெறுப்பும் கிடையாது. போகும் பாதையில் புல் இருந்தால் சாதாரணமாக அதில் விருப்பு, வெறுப்பு, ஏற்படுவதில்லை. இவ்விதம் உலகில் எவ்வளவோ பொருள்கள் இருக்கின்றன. இவைகளின் மேல் உள்ள மனோநிலைக்கு ஔதாசீனம் என்ற பெயர். ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு வஸ்துக்களின் மேல் ஔதாசீனமான நிலை உண்டு.

மேலே சொன்ன ராக த்வேஷ, ஔதாசீன்யம் என்ற மூன்று குணங்களால் ஏற்படும் மனமாற்றம், அதனால் ஏற்படும் சுக துக்க அனுபவங்கள். இவைகளைப் பற்றி நாம் சினிமாவிலும் பார்க்கின்றோம். உதாரணமாக பக்கத்து வீட்டில் புதுக்குடித்தனக்காரன் ஒருவன் வந்தான் என்று வைத்துக் கொள்வோம். முதலில், "யார் வந்தால் நமக்கென்ன" என்று அவனிடம் உதாசீனமாக இருப்போம். அவன் தன் வீட்டுக் குப்பையை நம் வீட்டில் போட்டால் அவனிடம் இப்போது த்வேஷம் வரும். முன்னால் உதாசீனமாக இருந்தவனிடம் இப்போது த்வேஷம் ஏற்பட்டு விட்டது. பின்னால் அவனே நம்மிடம் மிகுந்த சினேகம் கொண்டாடினால், அப்போது த்வேஷித்தவனிடம், இப்போது ராகம் ஏற்பட்டுவிடும்.

இதே மாதிரி ராகத்திற்குரிய பொருள்கள் எல்லாம் த்வேஷமாகவும் ஆகலாம். இவ்விதம் மாறி மாறி ஏற்படும் ராகம், த்வேஷம், ஔதாசீன்யம் என்ற உள்ளே இருக்கும் இந்த மூன்று குணங்களை வைத்துத்தான், வெளியில் உள்ள உலகப்பொருள்களை நாம் மீண்டும் மீண்டும் பார்க்கிறோம். இவ்விதம் பார்க்கும்போது விரும்பிய பொருள்கள் வர வேண்டும். விரும்பாத பொருள்கள் வரக்கூடாது" என்று நினைக்கிறோம்.

இந்த ராகத்வேஷங்கள் இருக்கின்றவனிடம் நாம்போய், "நீ பூரண ஆத்மா" என்று சொன்னால் அவனுக்கு என்ன புரியும்? அவனுக்கு இன்னும் அதிக துக்கம் வந்துவிடும். அதாவது, இப்போது "நான் பூர்ண ஆத்மா" என்று சுவாமிஜி சொல்கிறார். இன்னும் எனக்குத் துக்கம் இருக்கிறதே எனறு நினைத்து இன்னொரு புதிய துக்கம் ஏற்பட்டுவிடும்.

இந்தச் சூழ்நிலையில்தான் பகவான் கீதையில் கர்ம யோகத்தைப் பற்றிக் கூறிகிறார். "முன்னால் நீ ராகத்வேஷத்தை விட வேண்டும். ஆனால் அதன் கையில் அகப்பட்டுக் கொள்ளாதே" என்று சொன்னார். ஆனால் எப்படி? இந்த ராகத்வேஷத்தின் கையில் அகப்பட்டுக் கொண்டுதானே தப்ப முடியாமல் கஷ்டப்படுகிறேன். இதிலிருந்து எப்படித் தப்பித்துக் கொள்வது? ராகத்வேஷத்தை வைத்துக் கொண்டு அதன் வசம் இல்லாமல் இருப்பது எப்படி" என்ற கேள்வி எழும். இதற்குப் பதிலாகத்தான் கர்மயோகம் இருக்கிறது.

கர்மயோகத்தில் இரண்டு விஷயங்கள் இருக்கின்றன. ஒன்று கர்மா, மற்றொன்று கர்மபலன். ராக த்வேஷங்கள் இருப்பதினால் நாம் கர்மங்களைச் செய்கின்றோம். அந்த கர்மத்தைப் பற்றியும் அதன் பலனைப் பற்றியும் சில உண்மைகளை நாம் தெரிந்து கொண்டால் அந்த ராகத்துவேஷத்தின் கையில் நாம் சிக்கிக் கொள்ளமாட்டோம்.

ராகத் துவேஷங்களுக்கு உட்படாமல் இருப்பது என்னவென்றால், ராகத்துவேஷங்கள் இருந்தபோதிலும், அவைகளால் நமக்குத் துக்கம் ஏற்படாமல் இருக்கக் கூடிய ஒரு சூழ்நிலையை மனதில் உருவாக்கிக் கொள்வதுதான்.

எனவே ராகத்துவேஷங்களை விட்டுவிடு என்று சொல்வது சாத்யமான காரியம் இல்லை. ராகத்துவேஷத்தினால் துக்கத்தை அடையாமல் இருக்க என்ன வழி என்று கேட்டால் அதற்குத்தான் கர்மாவைப் பற்றியும் கர்ம பலன்களைப் பற்றியும் சில உண்மைகளைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

சிலர் "நீ கர்மாவைச் செய். ஆனால் பலனை எதிர்பார்க்காதே" என்று கூறுவார்கள். இது தவறு. பலனை எதிர்பார்க்காமல் யாருமே காரியம் செய்ய முடியாது. "பிரயோஜனம் அனுத்திச்ய மந்தோ பி. ந ப்ரவர்த்ததே" என்று ஒரு வசனம் இருக்கிறது. இதில் உண்மை இருக்கிறது. இதன் பொருள்: பிரயோஜனத்தை எதிர்பார்க்காமல் முட்டாள் கூட ஒரு காரியத்தில் இறங்கமாட்டான். முட்டாள் என்றால் மந்த புத்தி உள்ளவன் என்று அர்த்தம்.

அதனால் கர்மாவைப் பலனை எதிர்பாராமல் செய்வது என்பதுகிடையவே கிடையாது. நாம் நடக்கும்போதுகூட, ஒரு

காலை எடுத்து ஒரு அடி முன் வைக்கும் போது "நான் இப்படிச் செய்தால் முன்னால் போவேன்", என்ற பலனை எதிர்பார்த்துத்தான் காலை முன் வைக்கிறோம். எனவே "கர்மாவைச் செய். பலனை எதிர்பாராதே" என்று சொல்வதெல்லாம் அனர்த்தம். கர்மயோகத்தின் சரியான அர்த்தத்தை இங்கு விசாரிப்போம்.

ராகத்துவேஷங்கள் எல்லோருக்கும் இருக்கிறது. இவைகளினால் என்ன ஏற்படுகிறது? ராகத்துவேஷங்களைப் பூர்த்தி செய்ய நாம் கர்மாக்களைச் செய்கிறோம். அந்தக் கர்மாக்களைப் பலனை எதிர்பார்த்து தான் செய்கிறோம். கர்மாவிற்குப் பலன்கள் நான்கு வகையானவை.

அவைகள்:

1. எதிர்பார்த்தபடி கிடைக்கும் பலன்.
2. எதிர்பார்த்ததற்கு மேல் கிடைக்கும் பலன்.
3. எதிர்பார்த்ததற்குக் குறைவாய்க் கிடைக்கும் பலன்.
4. எதிர்பார்த்ததற்கு நேர் எதிரான பலன்.



இவ்விதம் நான்குவிதமான பலன்கள் கர்மாவினால் ஏற்படலாம். பணத்தை வட்டி கிடைக்கும் என்ற பலனை எதிர்பார்த்து ஒருவன் கொடுத்தான். இருபத்து ஐந்து சதவீதம் வட்டி வர வேண்டும் என்று எதிர்பார்த்தான். அவனுக்கு எதிர்பார்த்தபடி **25%** வட்டி கிடைக்கலாம். அல்லது அதற்கு மேலாக **50%** ஆகவோ, அல்லது அதற்குக் குறைவாக **10%** ஆகவோ கிடைக்கலாம். அல்லது முதலே போய் நஷ்டம் ஏற்படலாம். இவ்விதம் நான்குவிதமான பலன்கள் எந்தக் கர்மாவிற்கும் ஏற்படலாம்.

ஆனால் யாருக்காவது நஷ்டம் அடைய வேண்டும் என்றோ எதிர்பார்ப்பதற்குக் குறைவாகப் பலன் கிடைக்க வேண்டும் என்றோ எண்ணம் உண்டா? இல்லை. எதிர்பார்த்தது கிடைக்க வேண்டும். அல்லது எதிர்பார்ப்பதற்கு மேல் கிடைக்க வேண்டும் என்றே எல்லோரும் விரும்புகிறார்கள்.

ஆனால் எதிர்பார்த்ததற்குக் குறைவாகவோ அல்லது நேர் எதிராகவோ பலன்கள் வந்து கொண்டுதான் இருக்கின்றன.

உதாரணமாக நாம் பாதையைக் கடந்து எதிர்ப்பக்கம் செல்ல விரும்புகிறோம். இதில் "எதிர்புறத்தைச் சேர்ந்துவிடுவோம்." என்ற பலனை எதிர்பார்த்துத்தான் பாதையைக் கடக்கிறோம். "நான் பத்திரமாகப் போய்ச் சேரமாட்டேன்" என்று யாரும் எண்ணுவது இல்லை. ஆனால் சிலசமயம் எவ்வளவோ இடைஞ்சல்கள் ஏற்படலாம். திடீரென்று இருதய நோய் வந்தோ அல்லது எதிர்பாராது ஆட்டோ ரிக்ஷா வந்து இடித்து விபத்து ஏற்பட்டோ, மறுபக்கம் சேர முடியாமல் போய்விடுகிறது. பாதையைக் கடக்கும் இந்தச் சிறு செயலில்கூட நாம் எதிர் பார்த்த பலன் நமக்குக் கிடைக்காமல் போய்விடுகிறது.

நமக்கு பூரண ஞானம் இருந்தால் முன்கூட்டியே இப்படி எல்லாம் ஏற்படும் என்று தெரிந்துவிடும். நமக்கு இந்தப் பூரண ஞானம் கிடையாது. ஓரளவு ஞானம் இருந்தாலும் அதைத் தடுக்கும் சக்தி கிடையாது, உதாரணமாகப் புயல் அடிப்பதற்கு முன் பத்திரிக்கையில், "சென்னை, ஆந்திரா கரையோரத்தில் இன்று மாலை பெரிய புயல் அடிக்கப் போகிறது" என்ற ஞானம் முன்கூட்டியே தெரிகிறது.. ஆனால் நாம் என்ன செய்ய முடியும்? பயிர்களையோ, மரங்களையோ எடுத்து வீட்டிற்குள் வைத்துக் கொள்ள முடியுமா?

இதுமாதிரி அல்ப ஞானத்தையும், அல்ப சக்தியையும் உடைய நாம் என்ன என்னவோ திட்டங்களைப் போடுகிறோம். எதை வேண்டும் என்று நினைக்கிறோமோ அதை அடைவதற்கும், எதை வேண்டாம் என்று நினைக்கிறோமோ அதைக் தடுப்பதற்கும் நாம் பிரயத்தனம் செய்துதான் ஆக வேண்டும். இதில் பலனை எதிர்பார்த்துதான் நாம் கர்மாக்களைச் செய்கிறோம். இந்தப் பலன் முன்னால் சொன்ன நான்கு வழிகளில்தான் வரும்.

நாம் விரும்பிய பலன் வரும்போது மனம் சுகத்தை அடைகிறது. வேண்டியதை அடைந்துவிட்டோம் என்று ஆனந்தம் ஏற்படுகிறது. நாம் அடைய விரும்பியதை அடைய முடியாதபோது துக்கமும், ஆத்திரமும் ஏற்படும். இவ்விதம் சுகமும், துக்கமும் மாறி மாறி வருகிறது. இந்த சுகதுக்கச் சூழலுக்குத் தான் சம்சாரம் என்று பெயர். இதிலிருந்து விடுபடும் வழியைப் பகவான் கீழ்க்காணும் ஸ்லோகத்தில் கூறுகிறார்.

"கர்மண்யேவாதிகாரஸ்தே மாபலேஷு கதாசன! மா கர்ம பல ஹேதுர் பூ மா தே ஸங்கோஸ்த்வ கர்மணி"

தே-உனக்கு கர்மணி ஏவ-கர்மாவில் (மட்டும்) தான் அதிகார:- அதிகாரம் (ஸ்வதந்திரம்) இருக்கிறது. கதாசனம்-ஒரு போதும், பலேஷு-பலன்களில் மா-இல்லை. இது அர்த்தம்.

ஏன் கர்மாவில் மட்டும்தான் நமக்கு அதிகாரம் இருக்கிறது? ஏனென்றால் ஒரு காரியத்தை நாம் செய்யலாம், அல்லது செய்யாமலும் இருக்கலாம் அல்லது வேறு தினுசாகவும் செய்யலாம். இந்த ஸ்வதந்த்ரம் மனிதனுக்கு இருக்கின்றது. பிராணிகளுக்குக் கிடையாது. பிராணிகளுக்குச் செயல் செய்வதற்குத் தான் ஸ்வதந்த்ரம் இருக்கிறதே ஒழிய செய்யாமல் இருப்பதற்கு ஸ்வதந்த்ரம் இல்லை.

கழுதை உதைக்க வேண்டும் என்று நினைத்தால் உதைத்துவிடும். "நாய் குரைக்க வேண்டும்" என்று நினைத்தால் குரைத்துவிடும். "இப்போது எஜமானர் தியானத்தில் இருக்கிறார். ஆகவே குரைக்கக்கூடாது" என்று நினைக்காது பிராணிகளுக்குத் தன் ஸ்வபாவமான காரியத்தைச் செய்வதில்தான் ஸ்வதந்த்ரம் இருக்கிறதே தவிர, இதைச் செய்யலாம், இதைச் செய்யக் கூடாது என்று விசாரிக்கும் சக்தி கிடையாது.

இப்போது என் கையில் ஒரு சிறுகல் இருந்தால் அதை நான் கையிலேயே வைத்துக் கொண்டு இருக்கலாம் அல்லது மேலே தூக்கிப் போடலாம். கல்லை மேலே எறிந்தவுடன் அதனால் ஏற்படக்கூடிய விளைவுகளை மாற்ற எனக்கு அதிகாரம் இல்லை. "கல்லே! கீழே வராதே!" என்று சொன்னாலும், பூமியின் ஆகர்ஷண சக்திக்கு உட்பட்டு அது கீழே விழத்தான் செய்யும். என் காலின் மேலேயே வந்துவிழலாம். காற்று எப்படி வீசுகிறதோ அந்தத் திசையில் விழும். விழுகின்ற இடத்தில் யாராவது இருந்தால் அவர்கள் தலை மேலும் விழலாம்.

அப்படி இருக்கும்போது, இந்தப் பலன் விஷயத்தில் யார் என்ன செய்ய முடியும்? பிராயச்சித்த கர்மாதான் செய்ய முடியும். அதாவது மற்றோர் கல்லை எடுத்து அதனால் முன்னால் எறிந்த கல்லை அடித்து மேலே விழாமல் திருப்பலாம். இங்கு இரண்டாவது

கல்லின் வேகம் அதிகமாக இருக்க வேண்டும். இப்படிச் செய்வதற்கு வேண்டிய சக்தி ஒருவனுக்கு இருக்குமானால் இவ்விதம் செய்யலாம். இதற்குப்பெயர் பிராயச்சித்த கர்மா.

இம்மாதிரி கர்மா சில இடங்களில் முடியும். டாக்டர்கள் ஒரு மருந்தினால் ஏற்படும் தவறை (விபரீத விளைவுகளை) வேறு மருந்தினால் மாற்றுவார்கள். ஒரு சமயத்தில் தவறாய்க் கொடுத்த சிகிச்சையை இவ்விதம் மாற்றலாம். ஒரு தவறு செய்துவிட்டால் அதைத் திருத்திக் கொள்ளச் செய்யும் கர்மாக்களுக்குப் பிராயச்சித்த கர்மா என்று பெயர்.

ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். நீ கர்மா செய்தவுடன் அதன் பலன் நிச்சயமாகக் கிடைத்துவிடும் என்பது தான். அந்தப் பலன் கர்மாவிற்கு ஏற்ற மாதிரிதான் இருக்கும்.

யாரால் இந்த உலகம் படைக்கப்பட்டதோ அவரால் ஏற்படுத்தப்பட்ட நியதி இது. எல்லா நியதிகளுமே இப்படித்தான் ஆகையால் உலகத்தில் இருக்கக் கூடிய எல்லா நியதிகளின்படியே கர்மாக்களின் பலன்கள் நமக்கு ஏற்படுகிறது. இந்த நியதிகளைப் பற்றி மேற்கொண்டு விசாரம் செய்யும் போது ஈசுவரனே எல்லா நியதிகளாகவும் இருக்கிறார் என்பது தெரியவரும்.

## ஈச்வர தத்துவம்

"இந்தக் கர்த்தா எங்கு இருக்கிறார்? எந்தப் பொருளை வைத்து இந்த உலகத்தை உண்டு பண்ணினார்?" என்ற பலவிதமான கேள்விகள் எழும்.

குயவன் மண் இல்லாமல் பானையைச் செய்ய முடியாது. அவனுக்கு ஒரு இடம் இருக்க வேண்டும். அது மாதிரியே ஈச்வரனும் ஒரு இடத்தில் இருந்தால், அந்த இடம் யாரால் உண்டாக்கப்பட்டது? ஈச்வரனால் என்றால் அந்த இடத்தை உண்டு பண்ணுவதற்கு முன், ஈச்வரன் எங்கு இருந்தார்? மேலும் அந்த ஈச்வரன் எந்தப் பொருளை வைத்து இந்த உலகைப் படைத்தார்" என்ற இந்தக் கேள்விகளுக்கெல்லாம் பதில் நம் வேதத்தில்தான் பார்க்க வேண்டும்.

எப்படிச் சிலந்தி தான் கட்டிய வலைக்குத்தானே கர்த்தாவாகவும், தன்னிடமிருந்தே உண்டாகிற ஒருவித திரவத்தையே

மூலப் பொருளாகவும் கொண்டு விளங்குகிறதோ, எப்படி நம்முடைய ஸ்வப்பனத்தில் நாமே ஸ்வப்ன உலகத்தைச் சிருஷ்டிக்கும் கர்த்தாவாகவும் ஸ்வப்ன சிருஷ்டிக்குத் தேவையான மூலப் பொருளாகவும் இருக்கின்றோமோ, அதேவிதமாக ஈச்வரனே இந்தப் பிரபஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தாவாகவும், சிருஷ்டிக்கு வேண்டிய மூலப் பொருளாகவும் சக்தியாகவும் இருக்கிறார்.

இதிலிருந்து மற்றொரு உண்மையும் விளங்குகிறது. எப்படி உண்டாக்கப்பட்ட பானை அதனுடைய மூலப் பொருளாக இருக்கக்கூடிய மண்ணிலிருந்து வேறாக இல்லையோ, அப்படியே ஈச்வரனையே மூலப் பொருளாக வைத்து உண்டான இந்த உலகம் ஈஸ்வரனுக்கு வேறாக இல்லாமல் ஈச்வரனாகவே இருக்கிறது என்ற இந்த உயர்ந்த தத்துவம்தான் இந்து மதத்திற்கே உரிய பெரிய உண்மை.

நம்முடைய இச்சையை வைத்து நாம் செய்யும் கர்மாக்களின் பலன் இந்த நியதிகளின்படி கிடைக்கிறது. இவ்விதம் இருக்கும் போது இந்த பலன்கள் யாரிடமிருந்து தான் வருகின்றன? ஈஸ்வரன் இடம் இருந்துதான் வருகின்றன. ஈச்வரனிடமிருந்து வரக்கூடிய பொருள்களை எல்லாம் நாம் எப்படி வைத்துக் கொள்வது? பிரசாதமாகத் தான் எடுத்துக் கொள்ள வேண்டும்.

## பிரசாத புத்தி

இந்தப் பிரசாதத்தைப் பற்றி ஒரு முக்கிய விஷயம். இந்தியா முழுவதும் எந்த இடத்திற்குச் சென்றாலும் பிரசாதம் என்றுதான் சொல்வார்கள். பிரசாதம் என்பதற்கு வேறு வார்த்தை போடவில்லை. தமிழ், தெலுங்கு, கன்னடம், மராட்டி, இந்தி முதலிய எல்லா பாஷைகளிலும் பிரசாதம் என்றேதான் கூறுகின்றார்கள். அது ஒரு நல்ல வார்த்தை.

ஒருவன் கோவிலுக்குச் சென்றால் பூஜை முடிந்த பின்பு இவனுக்கு என்ன கொடுப்பார்கள்? அங்கு பகவானுக்கு எதை நைவேத்யமாகச் செய்தார்களோ அதைக் கொடுப்பார்கள். அதற்குத்தான் பிரசாதம் என்ற பெயர்.

"என்ன பிரசாதம்" என்று யாரும் கேட்பதில்லை. பிரசாதம் என்றால் கையை நீட்டிவிடுவார்கள். எதைப் பிரசாதமாகக்

கொடுக்கின்றார்கள் என்று தெரிய வேண்டிய அவசியம் இல்லை. புஷ்பம், விபூதி, குங்குமம், கற்கண்டு, புளியோதரை, வடை, தீர்த்தம் என்று எது கொடுத்தாலும் அது பிரசாதம்தான். கொஞ்சம் கொடுத்தாலும் அதிகம் கொடுத்தாலும் அது பிரசாதம்தான். எப்படிக் கொடுத்தாலும் அது பிரசாதம்தான்.

இப்பிரசாதத்தை எடுத்துக் கொள்ளும்போது இவனுக்கு மனம் எப்படி இருக்கின்றது? விதவிதமான பொருள்கள், துளசி, வடை என்று கண்ணினால் பார்த்தாலும், இதற்கு மேல் மனதினால் ஒன்றைப் பார்க்கிறான். அது என்ன? அதுதான் பிரசாதம். கண்ணிற்கு என்னவோ துளசிதான். ஆனால் புத்திக்கு பிரசாதம் கண்ணிற்கு என்னவோ வடைதான். ஆனால் புத்திக்கு பிரசாதம்.

இதிலிருந்து பிரசாதம் என்பது ஒரு பாவனை என்பது தெளிவாகிறது. பகவானிடமிருந்து வருகின்ற பொருள்கள் எல்லாவற்றையும் இவன் பிரசாதம் என்ற புத்தியோடு பார்க்கிறான். அதனால்தான் இந்த புத்திக்குப் பிரசாத புத்தி என்று பெயர். இதற்குப் புத்தியோகம் என்றும் பெயர்.

"கோவிலில் கொடுக்கக் கூடிய பொருள்களை மட்டும் பிரசாதமாகப் பார்த்துவிட்டு, பாக்கி கர்மாக்களின் பலன்களை மாத்திரம் நீ உண்டு பண்ணுவதாக நினைப்பதினால் தான் உனக்கு கஷ்டம். நான்தான் அந்தப்பலன்களையும் கொடுக்கிறேன்" என்று பகவான் இங்கு சொல்கிறார்.

இந்த உண்மையை நாம் தெரிந்து கொண்டால் நம்முடைய அல்ப ஞானத்தினாலும், அல்ப சக்தியினாலும் கர்மாக்களைச் செய்யும்போது பலனானது நாம் எதிர்பார்த்தபடி வரலாம். வராமலும் இருக்கலாம். எது வந்தாலும், கர்ம நியதிக்கு ஏற்றபடிதான் இருக்கும். இதில் தவறு ஒன்றும் ஏற்படாது. ஏனென்றால் ஈச்வரனுக்கு எந்தவித பேதமும் கிடையாது. எதிர்பார்த்த பலன் கிடைக்காமல் இருப்பதற்குக் காரணம் அந்த ஈச்வரனுக்குத் தான் தெரியும்.

கர்ம பலனானது ஈச்வரனிடமிருந்து வருவதினால் எல்லாக் கர்ம பலன்களுமே பிரசாதம்தான். எல்லாக் கர்ம பலன்களும் பிரசாதமாக இருக்கும்போது உள்ளுக்குள் துக்கமே இருக்காது.

இங்கு ஒருவன் இம்மாதிரிக் கேள்வி கேட்கலாம். இந்த

பிரசாத புத்தியி னால் வாழ்க்கையில் முன்னேற முடியுமா? என்று. சரி பிரசாத புத்தி இல்லை என்று வைத்துக் கொள்வோம். இவன் எதிர்பார்த்த பலன் வரவில்லை. ஆகையால் துக்கமடைகிறான். இந்தத் துக்கத்தினால் இவன் மேன்மை அடைய முடியுமோ? முடியாது. எனவே கர்ம பலனைப் பிரசாதமாக ஏற்றுக் கொண்டு அந்தப் பலனால் ஏற்பட்ட அனுபவத்தை வைத்து, மீண்டும் கர்மாவில் எங்கே தப்பு இருக்கின்றது என்று பார்த்து வேறு சரியான விதமாகக் கர்மாவைச் செய்து வாழ்க்கையில் மேன்மை அடைகிறான்.

## கர்மயோகத்தின் இரண்டாவது பாகம்

### சாமான்ய தர்மம்

நாம் எந்தக் காரியங்களைச் செய்யலாம். எவைகளைச் செய்யக் கூடாது என்பதும் உலகத்தின் ஒரு நியதிதான். இந்த நியதியும் ஈஸ்வர சிருஷ்டியில் உள்ளது.

எது ஸ்வபாவமாக இருக்கிறதோ அதெல்லாம் ஈச்வர சிருஷ்டியில் இருக்கின்றது என்று அர்த்தம். நான் சாப்பிட வேண்டும் என்று ஆசைப்பட்டால் அது தனிப்பட்ட ஆசை இல்லை. இது எல்லோருக்கும் இருக்கக்கூடிய ஆசை. எல்லோருக்கும் பசி, தாகம் முதலியன இருக்கக் கூடியது. இதுவும் ஈச்வர சிருஷ்டிதானே, ஒருத்தருக்கு மட்டும் பசி, தாகம் முதலியன இருக்கிறது என்றால் அப்போது அது ஈச்வர சிருஷ்டி ஆகாது என்று சொல்லலாம்.

பூமிக்கு ஆகர்ஷண சக்தி இருக்கின்றது. எனவே ஒரு வஸ்துவை மேலே தூக்கிப்போடும்போது அது கீழே விழுகின்றது. இது நம்மால் ஏற்படுத்தப்பட்டது அல்ல. இவ்விதம் ஸ்வபாவமாகவே ஈச்வர சிருஷ்டியில் இருக்கக்கூடிய ஒரு நியதி. இவ்விதம் பசி, தாகம், தர்மாதர்மங்கள் முதலான பல ஈச்வர விஷயங்கள் சிருஷ்டியில் ஸ்வபாகமாகவே இருக்கின்றன.

இதேபோல, சில விஷயங்களை நாம் பிறரிடமிருந்து எதிர்பார்க்கும் போது, அதையே அவர்களும் நம்மிடமிருந்து எதிர்பார்த்தால் அதற்கு என்ன அர்த்தம்? நாம் எதை எதிர்பார்க்கிறோமோ அது ஈச்வர சிருஷ்டி என்று தான் அர்த்தம்.

என்னை யாரும் இம்சிக்கக் கூடாது என்ற எண்ணம்

உனக்கு இருக்கின்றது. இந்த இம்சை மூன்று வகையானது மனம், வாக்கு, காயம் என்ற மூன்று வகையாலும் யாரும் என்னை இம்சிக்கக் கூடாது என்ற எண்ணம் உங்களுக்கு இருக்கிறது.

இதே போல் பக்கத்தில் இருப்பவனுக்கும் "என்னை யாரும் மூன்று கரணங்களாலும் இம்சிக்கக் கூடாது" என்ற எண்ணம் இருந்தால் இந்த அஹிம்சை என்ன தர்மமாகிறது? அது உலக தர்மமாகிறது. அதுவும் ஒரு நியதியாக மாறி விடுகின்றது. எல்லோரும் நினைப்பதினால் இதை யாரும் சொல்லித்தர வேண்டியதில்லை. இந்த தர்மம் தெரிந்து கொள்ள, கீதை படிக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை.

"என்னுடைய பொருளை யாரும் திருடக் கூடாது என்று ஒவ்வொருவரும் நினைக்கிறோம். அதேபோலத் திருடனும் கூட நினைக்கிறான். எல்லோருமே மற்றவர்கள் தன்னிடம் உண்மையைச் சொல்ல வேண்டும் என்றுதான் எதிர்பார்க்கிறார்கள். யாரும் பொய்யை எதிர்பார்க்கவில்லை. இவ்விதம் சத்யம் என்றும், அஹிம்சை என்றும், அஸ்தேயம் (திருடாமை) என்றும் பல தர்மங்கள் பொதுவாக இருக்கக் கூடியவை. இவை நம்முடைய சிருஷ்டி அல்ல. ஈச்வரனுடைய சிருஷ்டியோகும்.

சிருஷ்டிக்கப்பட்ட பொருளும் சிருஷ்டித்த கடவுளும் ஒன்றே என்று பார்த்தோம். அதன்படி மேற்கூறிய நியதியும் (ஸாமான்யதர்மங்கள்) ஈச்வர சொரூபமேதான். இவ்விதம் ஈச்வர சொரூபமாக இருக்கக்கூடிய தர்மா தர்மநியதிகளைத் தள்ளிவிட்டு முரண்பாடான கர்மாக்களைச் செய்தால் அதனால் உனக்கு என்ன ஏற்படும்? உனக்குப் பயமும் வியா கூலமும்தான் ஏற்படும்.

மற்றவர்கள் தன்னிடம் எப்படி நேர்மையாக நடந்து கொள்ள வேண்டும் என்று உலகத்தில் உள்ள எல்லோருக்குமே தெரியும். "யாரும் பொய் சொல்லிவிடக்கூடாது. எல்லோரும் என்னிடம் அன்பாக இருக்க வேண்டும். எனக்கு உதவி செய்ய வேண்டும். யாரும் என்னிடம் கோபம் கொள்ளக் கூடாது. எல்லோரும் சிநேகமாக இருக்க வேண்டும்", என்ற இவ்வித விஷயங்களில் உலகத்தில் யாருக்கும் சந்தேகமே கிடையாது.

உலகம் என்னோடு எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதில் யாருக்குமே சந்தேகமே கிடையாது. ஆனால் நான் உலகத்தோடு எப்படி நடந்து கொள்வது என்பதில்தான் சந்தேகம்.

இதிலிருந்து என்ன தெரிகின்றது என்றால் நல்லது எது? என்று யாரும் கற்றுக் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை என்பது. ஆனால் இவனுடைய செயல் வரும்போதுதான், அவைகளைக் கடைப்பிடிப்பதில்லை. உதாசீனம் செய்துவிடுகிறான். பிறர் பொய் சொல்லக்கூடாது என்பான். ஆனால் இவன் மட்டும் தன் லாபத்திற்காகப் பொய் சொல்லுவான்.

இவன் பணம் வேண்டும் என்று நினைக்கிறான். பணம் வேண்டியதுதான். ஏனென்றால் பணத்திற்கு ஈடு பணம்தான். பணத்தினால் அடையக் கூடியதைப் பணத்தினால்தான் அடைய முடியும். ஆனால் அந்தப் பணம் யாருக்காக? பணம் எனக்காகவா? அல்லது பணத்திற்காகவா என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

பணம் ஒருவனைப் பெரியவனாக்காது. நீ பெரியவனாக இருந்தால் பணம் வந்தால் உனக்கு உபயோகப்படும். நீ சிறியவனாக இருந்து பணம் வந்தால் உனக்கும் கஷ்டம் பிறருக்கும் கஷ்டம். பணம் வந்தால் எல்லாம் வாங்கி அனுபவிப்பேன் என்பான். யார் அனுபவிப்பது? இவனுடைய மனம் அனுபவிக்கக்கூடியதாக இருந்தால்தானே முடியும். இவனுக்குத்தான் உள்ளுக்குள்ளே பொய் சொன்னோமே என்று பயம் இருக்கிறதே, அதுதான் அசாந்தம். அசாந்தம் தான் அவன் பணத்தில் பெற்ற பரிசு. சாந்தி இல்லாவிட்டால் அந்தப் பணம் எதற்காக?

சாந்தி இல்லாமல் வாழ்க்கையில் ஒரு சுகத்தையும் அடைய முடியாது. சாதாரண இந்திரிய சுகத்தை அடைய வேண்டுமென்றாலும்கூட, இவனுக்கு மனம் சாந்தமாக இருக்க வேண்டும். இதைத் தான் தியாகராஜ ஸ்வாமிகள் தன் கிருதியில் சொன்னார்,

"சாந்தமுலேக செளக்யமுலேது
சாந்தனுக்காயினா
வேதாந்தனுக்காயினா...
சாந்த முலேக செளக்ய முலேது"

அந்த சாந்தி இல்லாமல் பெரியயோகியாகவோ அல்லது வேதாந்தியாகவோ இருந்தால் கூட அதனால் ஒரு பிரயோஜனமும் இல்லை.

(இங்கு வேதாந்தி என்றால் எல்லாவேதாந்த சாஸ்திரங்களையும் நன்றாகப் படித்து வார்த்தைகளை மட்டும் தெரிந்து வைத்துக் கொண்டு இருப்பவன் என்று அர்த்தம்).

அப்படிப்பட்ட சாந்தியை நாம் ஈடாகக் கொடுத்து சம்பாதிக்கும் பணம் எதற்குப் பிரயோஜனமாகும்?

## விசேஷ தர்மங்கள்

இதுவரை சொன்னது சாமான்ய தர்மங்களைப் பற்றியது. இது எல்லோராலும் தாரதம்யமின்றிக் கடைப்பிடிக்கப் பட வேண்டியது,"விசேஷ தர்மம்". சூழ்நிலைகளுக்கும், பாத்திரங்களுக்கும் உறவுகளுக்கும் ஏற்றாற்போல் ஒவ்வொருவரும் செய்ய வேண்டிய சில தர்மங்கள் இருக்கின்றன. இது விசேஷ தர்மம் எனப்படும். உபாத்தியாயர் என்றால் அவருக்கு ஒரு விசேஷ தர்மம் உண்டு. வித்யார்த்தி என்றால் அவனுக்கு ஒரு விசேஷ தர்மம். சினேகிதன் என்றால் ஒரு விஷேச தர்மம். இப்படிப்பட்ட விசேஷ தர்மங்களும் கர்ம யோகத்தின் கீழ் வருகின்றன.

சாமான்ய தர்மங்களைத் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. அவைகள் இயல்பாகவே நமக்குத் தெரிந்தவை. ஆனால் விசேஷ தர்மங்களை நாம் நம்முடைய விவேக சக்தியைப் பயன்படுத்தித் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த விவேக சக்தி மனிதனுக்கு மட்டுமே இருக்கிறது.

தென்னை மரம் என்றால் தேங்காய்தான் காய்க்கும். பக்கத்தில் புளியமரம் இருந்தால் அதில் புளியங்காய்தான் காய்க்கும். தேங்காயைப் போலவா புளியங்காய் இருக்கும்? புளியங்காய் புளிப்பாகத்தான் இருக்கும். அது புளிப்பாகத்தான் இருக்க வேண்டும். இது இவ்விதம் இருக்க வேண்டும் என்ற நியதி உள்ளது.

மிருகங்களைப் பார்க்கும்போதும் அவைகள் எவ்விதம் சிருஷ்டிக்கபபட்டனவோ அவ்விதமே இருக்கின்றன. எருமை எருமையாகவே நடந்து கொள்கிறது அதை "வேகமாகப்போ" என்றால் போகுமா? குரங்கைச் "சும்மா இரு" என்றால் இருக்குமா? ஒவ்வொரு மிருகமும் அதன் ஸ்வபாவப்படிதான் இருக்கும். இதெல்லாம் ஈச்வர சிருஷ்டிதான்.

மிருகங்கள், பக்ஷிகள், விருக்ஷங்கள் எல்லாமே அதன் அதன் ஸ்வதர்மத்தில் தான் இருந்து கொண்டிருக்கின்றன. மனிதனுக்குத்தான் இதில் கஷ்டம். ஏனென்றால் ஸ்வதந்த்ரம் என்ற ஒன்றை இறைவன் மனிதனுக்குக் கொடுத்திருக்கிறான். ஆகையினால் இவனுக்கு விவேகத்தோடு செய்யும் சக்தி இருக்கிறது. இதனால் இவன் ஒரு காரியத்தைச் செய்யவும் செய்யலாம். செய்யாமலும் இருக்கலாம். அல்லது வேறுவிதமாகவும் செய்யலாம். இந்த ஸ்வதந்த்ரம் இருப்பதால் இவன் தர்மா தர்மங்களைத் தெரிந்து கொண்டு அதன்படிதான் காரியங்களைச் செய்ய வேண்டும்.

இதனால்தான் சாப்பிடுவது முதலானதிலிருந்து இவன் விவேகத்தோடு செய்ய வேண்டியதாக இருக்கிறது. எதைச் சாப்பிடுவது.எதைச் சாப்பிடக் கூடாது என்பது முதல் இவன் எல்லாவற்றையும் விவேகத்தினாலும் அனுபவத்தினாலும் தெரிந்து கொள்ள வேண்டும். எந்த எந்தக் காரியங்களைச் செய்யலாம், எவைகளைச் செய்யக் கூடாது என்பது தெரிந்து புத்திபூர்வமாகச் செய்ய வேண்டும்.

## ஈச்வர சிருஷ்டியில் நம் பங்கு

ஒவ்விதம் நாடகத்தில் நடிக்கும் பாத்திரத்திற்கு, இந்த இந்தச் சந்தர்ப்பத்தில் இவ்விதம் வசனம் பேச வேண்டும், இவ்விதம் காரியம் செய்ய வேண்டும், இவ்விதம் நடிக்க வேண்டும் என்று உள்ளதோ, அதே போல, இந்த உலகமாகிய பெரிய நாடக மேடையில் "சிருஷ்டி, ஸ்திதி, லயம்" என்னும் மகத்தான நாடகம் நடந்து கொண்டிருக்கிறது. அதன் டைரக்டர் ஈச்வரன். நாம் எல்லோருமே நடிகர்கள். ஆகையால் நமக்கு அந்த நாடகத்தில் பங்கு உண்டு. அந்தப் பங்கைச் செய்வதே நாம் ஈச்வரனுக்குச் செய்யக்கூடிய அர்ப்பணமாகும்.

ஈச்வரன் நமக்குக் குழந்தைகளைக் கொடுத்திருக்கிறார். அந்தக் குழந்தைகளைப் பெரியவர்களாகச் செய்வது கூட ஈச்வரனுக்கே அர்ப்பணம் என்று செய்ய வேண்டும். இந்தத் தேகம் நம்மால் செய்யப்பட்டது அல்ல. அது ஈச்வரனால் கொடுக்கப்பட்டதே.

இந்தத் தேகத்தைப் பராமரித்துக் கொள்வதுகூட ஈச்வரார்ப்பணம்தான்.

எதைத் தள்ள வேண்டுமோ அதைத் தள்ளுவது, எதைச் செய்ய வேண்டுமோ அதைச் செய்வது - இப்படி எல்லாமே ஈச்வரார்ப்பணம் என்று செய்ய வேண்டும். இவ்விதம் வாழ்வில் ஏற்படும் சந்தர்ப்பங்களுக்கேற்றபடி நடித்து நம்முடைய நற்கர்மாக்களினால் ஈச்வரனை அர்ச்சித்து அந்தக்கரண சுத்தி பெறுவதால் ராகத்வேஷங்களுக்கு உட்படாமல் இருக்க முடிகிறது.

இப்போது ராகத்வேஷங்கள் இருந்த போதிலும் அவைகளுக்கு உட்படாமல் தர்மா தர்மங்களின்படி, காரியங்களைச் செய்யும்போது கொஞ்சம் கொஞ்சமாக ராகத்வேஷங்களிலிருந்து விடுதலையானது ஏற்படுகிறது. இதன் பெயர் கர்மயோகம் என்பது.

## புரிந்து விட்டால் ஆனந்தமே!

இவ்விதம் கர்மாவைப் பொறுத்து இரண்டு இடங்களிலும் ஈச்வரனுடைய சம்பந்தம் வேண்டும். கர்மா செய்யும் போது தர்ம சொரூபமான ஈச்வரனை தர்மாத்யக்ஷகராகப் பார்க்க வேண்டும். கர்மாக்களை ஈச்வரனுக்கே அர்ப்பணம் செய்ய வேண்டும். அதே மாதிரிக் கர்மபலன் வரும்போது கூட ஈச்வரனைக் கர்மபல தாதாவாகப் பார்க்க வேண்டும். கர்மபலனைப் பிரசாதமாக எடுத்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் இரண்டு வகையிலும் ஈச்வரார்ப்பணம் செய்யும் கர்மயோகிக்கு ராகத்வேஷங்கள் துக்கத்தைக் கொடுக்கும் சக்தியை இழக்கின்றன. பாம்பின் பல்லை எடுத்தது போலவும், வறுத்த விதைபோலவும் ராகத்துவேஷங்கள் இருந்தபோதிலும், அவைகள் சம்சாரத்திற்கோ, துக்கத்திற்கோ காரணமாக அமைவதில்லை. ராகத் வேஷத்திற்குள்ள சக்தியானது போய் விடுவதால் அவைகள் இவனை ஒன்றும் பண்ணாது. அப்போது மனம் எப்படி இருக்கும்? மனம் சாந்தமாக, ப்ரசன்னமாக, ஆனந்தமாக இருக்கும்.

இனி எப்போதும் ஆனந்தமே நம் வாழ்வில் நிலவும்.

: ஓம் :





***Lord Daksinamurti*** is Lord Siva manifest as the first teacher, is the presiding deity of knowledge and is the source of all knowledge beginning with the Vedas which are a body of knowledge that is revealed to the rishis.

Lord Daksinamurti appears before the Sanatkumaras (the four manasa putras of Lord Brahma) as a teacher, seated under a banyan tree facing the south, and imparted Brahma-Vidya (Knowledge of Brahman) to them. This is how the tradition of knowledge called Vedanta began and is coming down to us, in an unbroken chain, linked by Sri Shankaracarya in the middle, and extending down to our own teacher.



***His Holiness Swami Dayananda Saraswati*** belongs to that rare class of Teachers of Vedanta who brook no compromise in upholding the sanctity of knowledge. His is that traditional style of teaching which believes in the direct unfoldment of the inexplicable truth to the seekers even as the teaching is on. His all comprehensive perspective of life, scholarly depth, profundity of knowledge, superb logic and rigging authenticity shows in his discourses. In the current century, the style of teaching of most of the traditional scholars is not easily understood and assimilated by the modern mind. On the other hand, those who claim to be modern teachers seem to teach what is not true to the tradition. This gap in the teaching has been bridged very aptly by Swamiji.

Swamiji's unique contribution to humanity has been designing and teaching three years resident Vedanta courses. Swamiji has established three institutions of learning: two in India and one in USA. Arsha Vidya Gurukulam in Coimbatore, Swami Dayananda Ashram in Rishikesh and Arsha Vidya Gurukulam in Saylorsburg, USA.



***His Holiness Swami Jitatmananda Saraswati*** a disciple of H.H. Pujya Swami Dayananda, underwent a meticulous study of Sanskrit and Vedanta. His study of the sastras has transformed him to a "life of spontaneity". Upholding the sanctity of knowledge Swamiji preserves the traditional style of teaching. Travelling around Malaysia, Swamiji is teaching in various centers in Malaysia..Being the first link in sowing the seed of traditional teaching Swamiji has established the Arsha Vidya Nilayam, a traditional institution of scriptural learning.